# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் [மார்க்சிஸ்ட்] தமிழ் வார ஏடு

கதிர் 14 19—12—76 8 பக்கம் 40 காசு பொறி 38

**கொரில்லாப் படைகளின் தாக்குதல்**

தாய்லாந்தில் கடந்த மூன்று ஆண்டுகளில சிவில் ஆட்சி நடைபெற்றது. அவ்வருடங்களில் அந்நாட்டின் கம்யூனிஸ்ட் கட்சி தலைமையிலான கொரில்லாக்களின் தாக்குதல் அதிகரித்துள்ளன. தாய்லாந்து உளவு இலாகாவின்படி 1972-ம் ஆண்டில் 3500 தாக்குதலும் 1973-ல் 5000—மும் 1974-ல் 8000—மும் நடைபெற்றுள்ளன.

'எகனமிக் அண்ட் பொலிடிகல் வீக்லி' நவம்பர்—20

# டிச.22 தோழர் ஸ்டாலின் பிறந்தநாள்



"கம்யூனிஸ்டுகள் எத்தனை நாட்களுக்குமக்களுடன் பரந்த அளவில் தொடர்புவைத்துக் கொண்டிருக்கின்றனரோ அதுவரையில் அவர்களை யாராலும் அசைக்க முடியாது என்பதை ஒரு விதியாகவே வைத்துக் கொள்ளலாம். எதிர்மறையாக கூற வேண்டுமானல், தங்களுடைய பலத்தை இழந்து ஒன்றுமில்லாத சூன்யமாக போல்ஷ்விக்குகள் (கம்யூனிஸ்டுகள்) ஆக வேண்டுமானல், மக்களுடன் தங்களுக்குள்ள தொடர்பை அவர்கள் அறுத்துக் கொண்டு விட்டால் போதும்; மக்களுடன்தொடர்பு இழந்தால போதும்; அதிகார வர்க்கத்'துரு'வினல் தங்களை மூடிக்கொண்டு விட்டால் போதும்.

கிரேக்கப் புராணத்தில்ஒரு அரக்கனைப் பற்றிய கதையொன்று இருக்கிறது.

அந்த அரக்கன் பெயர் அண்டேயஸ். சமுத்திரக் கடவுளாகிய பேசிடனுக்கு பூமாமாதேவியாகிய கேயேயிடம் பிறந்த மகன்தான் அண்டேயஸ் என்று அக்கதை கூறுகிறது. அவனைப் பெற்றெடுத்து பாலூட்டி வளர்த்த அன்னையிடம் அவனுக்கு அதிக அன்பு. அவனல் வீழ்த்திக் கொல்லப்படாத வீரன் எவனும் கிடையாது; யாராலும் வெல்லற்கரிய வீரன் என்று அவன் கருதப்பட்டான். அவனுக்கு அவ்வளவுபலம் எப்படிக்கிடைத்தது?

சண்டையில் களைப்படையும் ஒவ்வொருதட்வையும் தன்னைப் பெற்றெடுத்து பாலூட்டி வளர்தத அன்னையாகிய பூமியைத் தொடுவானும். உடனே மகத்தான பலத்தை அடைவானும். இதில்தான் அவனுடைய பலம் அடங்கியிருக்கிறது.

எனினும், அவனுக்கு ஒரு பலவீனமான இட்மும் இருந்தது. பூமியை விட்டுப் பிரித்து தனிமைப்படுத்தப்படும் அபாயமே அது. அவனுடைய இந்த பலவீனதனை அவனுடைய விரோதிகள் தெரிந்து கொண்டு விட்டனர். சமயம் பார்த்துக் காத்துக் கொண்டிருந்தனர். இந்தப்பலவீனத்தைப் பயன்படுத்தி அவனைக் கொல்வதற்கு ஒரு விரோதி வந்தான். அவன்தான் ஹெர்குலஸ்.

எப்படி அவனை (அண்டேயசை) ஹெர்குலஸ்தோற்கடித்தான். அவனை அப்படியே பூமியிலிருந்து மேலே தூக்கினன்; பூமியைத் தொடமுடியாத ஆகாயத்திலேயே வைத்துக் கழுத்தை நெறித்துக் கொன்றுன்.

கிரேக்கப் புராணத்து வீரனுகிய அண்டேயசை, போல்ஷ்விக்குள் நினைவு படுத்துகின்றனர் என்று நான் நினைக்கின்றேன். தங்களுடைய அன்னையுடன் தொடர்புவைத்திருக்கும் வரையில் அண்டேயசைப் போல் போல்ஷ்விக்கருள் பலசாலிகளாக இருக்கின்றனர்.

போல்ஷ்விக்குகளைப் பெற்று எடுத்து பாலூட்டி போஷித்து, போதனை செய்து வளர்க்கும் தாய் பொது மக்கள் தாம். அவர்கள் தம்முடைய தாயுடன் அதாவதுபொது மக்களுடன் தொடர்பு வைத்திருக்கும் வரையில் போல்ஷ்விக்குகள் யாராலும் வெல்ல முடியாத வீரர்களாக விளங்குவதற்கு முழுச் சந்தர்ப்பம் உண்டு.

போல்ஷ்விக்குகளின் தலைமையை வெல்லமுடியாததற்கு இதுதான் காரணம்."

—ஸ்டாலின்

## டிசம்பர்-25 வெண்மணித் தியாகிகள் நினைவு நாள்



நிலப்பிரபுத்துவம் இட்ட தீயில் நீறுபூத்த தியாகத் திலகங்களே!

விவசாயிகள் இயக்கத்தின் வீரப் புதல்வர்களே!

உங்களது தியாக ஜ்வாலை எங்களுக்கு இலட்சிய வழி காட்டட்டும்!

வெண்மணி தீபங்களே நெஞ்சு மறக்காது உங்களை!

உங்களுக்கு எங்கள் வீர வணக்கங்கள்!

## பர்ன்பூர் உருக்கு தொழிலாளர் வெற்றி

மேற்கு வங்கத்தில் பர்ன்பூரிலுள்ள இந்தியன் உருக்கு ஆலையில் பணிபுரியும் 4 தொழிற்சங்க ஊழியர்களை, ஆலை நிர்வாகம் வேலையை விட்டு நீக்கியது. இவர்களெல்லாம் சி.ஐ.டி.யூ. சங்கத்தைச் சேர்ந்த முக்கிய தலைவர்கள்.

இவர்கள் வேலைக்கு ஆஜராகவில்லையென்று காரணம் காட்டி, ஆலை நிர்வாகம் டிஸ்மிஸ் செய்தது.

வேலை நீக்கத்தை எதிர்த்து தொழில் இலாகாவின் கவனத்துக்கு தொழிற்சங்கம் மனு செய்தது, வேலை நீக்கம் சட்டபூர்வமானதுதானு என்று முடிவு செய்யுமாறு தொழில் இலாகாவானது 9-வது தொழில விசாரணைக் கோர்ட்டுக்கு அனுப்பி வைத்தது.

1975பிப்ரவரி21-ல் தொழில் கோர்ட்டானது. "4 தொழிலாளர்களையும் டிஸ்மிஸ் செய்தது சட்டவிரோதம் என்றும், நீக்கப்பட்ட நாள் முதல் சம்பளம் கொடுத்து, மீண்டும் வேலைக்கு எடுத்துகொள்ள வேண்டும்" என்றும் தீர்ப்பு கூறியது.

ஆனல் ஆலை நிருவாகமோ இந்த உத்தரவை நிறுத்தி வைக்கச் செய்ததுடன், இதை எதிர்த்து கல்கத்தா உயர்நீதி மன்றத்தில் வழக்கும் தொடுத்தது. கடந்த நவம்பர் 10-ல் உயர்நீதிமன்ற நீதிபதி ராமேந்திரமோகன் தத்தா தீர்ப்பளித்தார்.

தொழில் கோர்ட் தீர்ப்பு சரியானதுதான் என்றும், 4 பேர்களையும் பாக்கிச்சம்பளத்துடன் வேலைக்கு எடுத்துக் கொள்ளவேண்டும் என்று உத்தரவிட்டது, உயர்நீதி மன்றம்.




—நன்றி: 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'

பட்டத்தில்—இடதுபுறம் இருப்பவர் மேற்கு வங்க முதலமைச்சர் சித்தார்த்த சங்கரரே. வலதுபுறம் இருப்பவர் ஒரிசா முதலமைச்சர் நந்தினி சதபதி. இவ்விருவரையும் உயர்த்தித் தாங்கிப் பிடித்திருக்கும் "கை" மேலிடம் அல்லது மத்திய பீடம். "ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு" என்பதை "ஒன்றுபட்டாலுண்டு வீழ்ச்சி" என்பது ஓவியரின் நகைச்சுவை.

## ஓர் அறிவிப்பு

தவிர்க்க முடியாத காரணங்களால் கடந்த இருவாரங்களில் "இந்திய சுதந்திரப் போராட்ட வரலாறு" வெளியிட முடியவில்லை. அடுத்த வாரத்திலிருந்து வழக்கம்போல் வரும்.

**இ. எம். எஸ்**

22—12—76ந் தேதி குளித்துறையில் டுடோரியல் அரங்கில் பேசுகிறார்.

# வெள்ள நிவாரண நிதி ரூ. 10 ஆயிரம் திரட்ட

## தமிழக சி. ஐ. டி. யூ. முடிவு

(நமது தொழிற்சங்க நிருபர்)

இந்தியத் தொழிற்சங்க மையத்தின் (சிஐடியூ) தமிழ் மாநிலக்குழுக்கூட்டம் 5-12-76ந் தேதியன்று மதுரை அலுவலகத்தில்நடைபெற்றது. துணைத் தலைவர் தோழர் கே அனந்த நம்பியார் தலைமை வகித்தார்.

கூட்டத் துவக்கத்தில் தோழர்கள் மாவோ, ஏ பி பழனிச்சாமி ஆகியோரது மறைவுக்கு இரங்கல் தெரிவிக்கப்பட்டது.

அடுத்து தற்போதைய தமிழ்நாட்டு தொழில் நிலவரங்கள் குறித்து பரிசீலனை செய்த பின்பு பின்வரும் முடிவுகளும் தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### அனுதாபம்

வெள்ளச் சேதத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ள சென்னை மாநகர் மற்றும் புறநகர்ப்பகுதிவாழ் மக்களுக்கு ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவிப்பதுடன், வெள்ள நிவாரண நிதிக்கு மாநிலக குழு சார்பில் 10 ஆயிரம் ரூபாய்க்கு குறையாமல்தொழிலாளர்களிடம் வசூல் செய்து கொடுப்பது என்றும் முடிவு செய்யப்பட்டது.

### காவேரி நீர்பாசன விவசாயிகளின் துயர் துடைப்பு

(அ) காவிரி நீர்ப்பங்கீடு சம்பந்தமாக புதிய சமரச ஒப்பந்தம் ஏற்படுகிறவரையில், பழைய 1924-ம் வருடம் ஒப்பந்தப்படி மேட்டூர் அணைக்கு தண்ணீர் விடுமாறு கர்னாடக அரசை வற்புறுத்துமாறு மத்திய அரசுக்கு வேண்டுகோள் விடப்பட்டது.

(ஆ) தஞ்சையில் ஏற்கெனவே அமுலில் உள்ள முத்தரப்பு ஒப்பந்தக் கூலியையும மற்ற பிரதேசங்களில் விவசாயத் தொழிலாளர்களுக்கான குறைந்தபட்சக் கூலி விகிதங்களையும கருராக அமுல் படுத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளுமாறு தமிழக அரசுக்கு கோரிக்கை விடப்பட்டது.

### ஜனநாயக உரிமைகளுக்கான மக்கள் மன்றம்

புதுடெல்லியில் அக்டோபர் 17-ல் ஏற்பட்ட பிரஜா உரிமைகளுக்கும் ஜனநாயக உரிமைகளுக்குமான மக்கள்மன்ற அமைப்பை இக்கூட்டம் வரவேற்றது, அதன் செய்தியை தமிழகம் முழுதும் எடுத்துச் செல்ல அனைத்து உதவிகளையும் செய்யுமாறு இணைக்கபட்ட சங்கங்களை கேட்டுக் கொண்டது.

### விநியோக ஏற்பாடு

கிராமங்களிலும் நகரங்களிலும் நபர் ஒன்றுக்கு தினசரி 500 கிராம வீதம் கிலோ ஒன்றுக்கு ரூ. 1-60 விலையில் அரிசி கிடைகக அரசுஏற்பாடுசெய்ய வேண்டும் என்றும், அத்தியா மாநில தொழிலாளர் வசியப் பொருட்கள் அனைத்தும் கட்டுபடியாகும் விலையில் கிடைப்பதை உத்தரவாதப்படுத்தும் வகையில் பொது விநியோக ஏற்பாடுகளை பலப்படுத்த வேண்டும் என்றும அரசை இக்கூட்டம் கேட்டுக் கொண்டது.

### காண்ட்ராக்ட் முறை ஒழிப்பு

தொழில்களில் காண்ட்ராகட் முறை ஒழிப்புச் சட்டத்தை அமுல் படுத்துவதிலும கிராமப்புறங்களில் ரோடு, குவாரி, கட்டுமானத் தொழிலாளர்களின் குறைந்தபட்ச சம்பளவிகிதங்களை அமுல் படுத்தும்படிச் செய்வதிலும் இணைக்கப்பட்ட சங்கங்கள் முன் முயற்சி எடுக்குமாறு கேட்டுக் கொள்ளப்பட்டன,

### ஒன்றுபட்ட முயற்சி

லே-ஆப்; ஆட்குறைப்பு மூடுவிழா ஆகியவற்றை எதிர்த்து. சட்டம் அளிக்கும் சில பாதுகாப்புகளையும்பயன் படுத்திக்கொண்டு, ஒன்றுபட்ட முன முயற்சி எடுக்குமாறு இணைக்கப்பட்ட சங்கங்கள் கோரப்பட்டன.

ஆலோசனைக்குழு, குறைந்தபட்ச சம்பள ஆலோசனைக்குழு மற்றும் மாநில அரசு அமைக்கும தொழிலாளர் சம்பந்தப்பட்ட அனைத்துக் குழுக்களிலும் சி ஐ டி யூ வுக்கு பிரதிநிதித்துவம் அளிக்குமாறு தமிழக அரசை இக்கூட்டம் கேட்டுக்கொண்டது.

---

# தோழர் ஏ.கே.ஜி. மருத்துவமனையில் சிகிச்சை

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினரும். நாடாளுமன்ற எதிர்க்கட்சித் தலைவருமான தோழர் ஏ. கே. ஜி அவர்கள் உடல்நலமின்மையால் திருவனந்தபுரத்தில் உள்ள மருத்துவக கல்லூரி மருத்துவமனையில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டுள்ளார். இடது கையிலும் சாலிலும் வலி ஏற்பட்டதைத் தொடர்ந்து மருத்துவமனையில் அவர் அனுமதிக்கப்பட்டார். இவரை டாக்டர்கள் கே. என. ஒய். ஜோசப், விஜயராகவன்,வாசுதேவ் அய்யர் ஆகியோர் கவனித்து வருகின்றனர். ஏ கே ஜி யின உடல்நிலையைப் பரிசோதித்த டாக்டர்கள், அவரது உடல் நிலை திருப்திகரமாக இருப்பதாகக் கூறினர்.

தமிழ்நாட்டுக்கான நாடாளுமன்ற ஆலோசனைககுழு உறுப்பினராகவும் உள்ள தோழர் ஏ. கே. ஜி. உடல்நிலை சரியில்லாத காரணத்தினால், டிச 7-ல் மதுரையில் நடந்த ஆலோசனை குழுக் கூட்டத்திலும தமிழகத்தில அவர் மேற்கொள்வதாக இருந்த சுற்றுப்பயண நிகழ்ச்சிகளிலும கலந்துகொள்ள வில்லை என்பது அறிந்ததே.

---

# தமிழ் நாட்டில் தோழர் சமர்முகர்ஜி

## பல்லாயிரவர் திரண்ட கூட்டங்களில் சிறப்புரை

தமிழ் நாட்டுக்கான நாடாளுமன்ற ஆலோசனைக் குழுவின் உறுப்பினரும் நாடாளுமன்ற மார்க்சிஸ்ட கம்யூனிஸ்ட கட்சித துணைத் தலைவரும், சி ஐ டி யூ துணைத்தலைவருமான தோழர் சமர்முகர்ஜி தமிழகத்தில் கடந்த 6-ந் தேதி முதல் 11-ந் தேதி முடிய சுற்றுப் பயணம் மேற்கொண்டார். பல்லாயிரவர் திரண்ட சிறப்புக்



கூட்டங்களில் பங்கேற்று இன்றைய அரசியல் நிலைமை குறித்து சிறப்புரையாற்றினார். கடந்த 7-ந்தேதியன்று மதுரையில் நடந்த தமிழ்நாட்டுக்கான நாடாளுமன்ற ஆலோசனைக் குழுக் கூட்டத்தில் கலந்து கொள்ள வந்த தோழர் சமர் முகர்ஜி மதுரை, முகவை: நெல்லை, குமரி,சென்னை மாவட்டங்களில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த சிறப்புக் கூட்டங்களில் பேசினார்.

### போடி

மதுரைமாவட்டம் போடியில் 6ந்தேதியன்று நடந்த சிறப்புக் கூட்டத்திற்கு தோழர் பாக்கியம் தலைமை வகித்தார். தோழர் எம் முத்துசாமி பேசியபின் தோழர் சமர்முகர்ஜி நீண்டதோர் உரை நிகழ்த்தினார்.

### விருதுநகர்

முகவை:மாவட்டம் விருதுநகரில் 7ந்தேதிநடந்த சிறப்புக் கூட்டத்துக்கு கட்சியின் நகரச் செயலாளர் தோழர் பி.சீனிவாசன் தலைமைவகித்தார். எஸ் ஏ பெருமாள், சி செல்லச்சாமி ஆகியோர் பேசியபின் தோழர் சமர் சிறப்புரையாற்றினார்.

இவ்விரு கூட்டங்களிலும் இவரது ஆங்கில உரையை தோழர் டி. கே. ரெங்கராஜன் தமிழில் மொழிபெயர்த்தார்.

### நெல்லையில்

நெல்லையில் 8-ந் தேதியன்று நடந்த சிறப்புக்கூட்டத்தில் தோழர் சமர்முகர்ஜிகலந்து கொண்டு பேசினார்.

இக்கூட்டத்திற்கு. சுற்றிலுமுள்ள பல ஊர்களிலிருந்தும் தோழர்களும், பொதுமக்களும் திரளாக வந்திருந்தனர்.

### நாகர்கோவில்

குமரி மாவட்டம் நாகர் கோவிலில் நடந்த சிறப்புக் கூட்டத்தில் தோழர் சமர் கலந்து கொண்டு இன்றைய அரசியல் நிலை குறித்து விளக்கினார்.

இவ்விரு கூட்டங்களிலும் அவரது ஆங்கில உரையை வழக்கறிஞர் தோழர் சு. பாலதண்டாயுதபாணி தமிலில் மொழி பெயர்த்தார்.

இக்கூட்டங்களில் எல்லாம் தோழர் சமருக்கு கட்சிக்கிளைகள் மற்றும் பல்வேறு வர்க்க வெகுஜன ஸ்தாபனங்கள் சார்பில் ஏராளமான மாலைகளும். துண்டுகளும், மாலைக்கு பதிலாக நிதியும் வழங்கப்பட்டன. கோரிக்கை மகஜர்களும் அளிக்கப்பட்டன.

---

# ஜிம்மி கார்ட்டரின் தேர்தல்,...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

பெற்ற "லாக்-ஹீட், போர் விமானக் கம்பெனியும் ஆதரவு அளித்தது.

தற்போது உதவி ஜனாதிபதியாக உள்ள ராக்பெல்லர் குடும்ப கம்பெனிகளும், மார்கன் கம்பெனியும், மற்றும் பெரும் எண்ணெய்க் கம்பெனிகளும், எரிவாயுக் கம்பெனிகளும் உட்பட ஏராளமான பெரு முதலாளிகளும் இருவருக்கு தேர்தலில் பக்கபலமாக ஆதரவாக நின்றார்கள். சர்வதேசக் கம்பெனிகள் (பன்னாட்டுக் கம்பெனிகள்) பலவும் ஜிம்மிக்கு ஆதரவளித்தன.

### பதவி ஏற்பு விழா 4 இலட்சம் பேருக்கு அழைப்பு

அமெரிக்க நாட்டு தேர்தல் விதிகளின்படி வருகிற 1977 ஜனவரி 20-ந் தேதியன்று புதிய ஜனாதிபதி பதவி ஏற்பு விழா நடக்கிறது.

கார்ட்டரின்பதவி ஏற்புவிழாவுக்கு வருகை தருமாறு 4இலட்சத்துக்கு மேற்பட்டவர்களுக்கு அழைப்பு விடுக்கப்பட்டுள்ளது. இந்தப் பதவி ஏற்பு விழாவுக்கு மட்டும் சுமார் இரண்டரைகோடிடாலர் செலவாகும் என்று கருதப்படுகிறது.

---

# ஒரே தொழிற்சங்கம் சஞ்சய்காந்தி பாராட்டு

தொழிலாளர்களுக்கு மகிழ்ச்சியின்மை ஏற்பட்டபோதிலுங் கூட போனஸ் பிரச்சினை மீது அரசாங்கம் எடுத்த கொள்கையின் பக்கம் தைரியமாக நின்ற ஒரே தொழிற்சங்கம் ஐ என் டி யூ சி தான் என திரு. சஞ்சய் காந்தி கூறினார்.

—இந்தியன் வொர்க்கர்

நவம்பர்—8—1976

---

# ஆசிரியருக்கு

# விழுப்புரம் நகராட்சிக்கு வேண்டுகோள்

ஐயா.

விழுப்புரத்தில் உள்ள நகராட்சி பேருந்து நிலையத்திற்குள் உள்ள கழிவு அறையில் (கக்கூசில்) சிறுநீர் கழிக்கவும, மலம் கழிக்கவும 5காசு 10காசு என்று கட்டணம் வசூலிக்கப்படுகிறது.ஏழை, எளிய மக்களை இது பாதிக்கும்.

நீண்ட்தூரப் பிரயாணம் செய்துவரும பிரயாணிகள், பஸ் டிரைவர்கள்—கண்டக்டர்கள், பேருந்து நிலையத்தில் உள்ள வியாபாரிகள், பணிபுரியும் தொழிலாளர் ஆகியோர் கழிவு அறையில் நுழையக்கூடிய ஒவ்வொரு முறையும் கட்டணம கொடுத்துத தான் செல்ல வேண்டியுள்ளது இது சாத்தியமாகுமா? கையில் காசு இல்லாமல் சிறுநீர்கழிக்க அவசர அவசரமாகச் செல்வோர் நிலை பார்த்தால் பரிதாபம்.

கிராமப்புறங்களிலிருந்தும் வெளியூர்களிலிருந்தும் வரும் மக்கள் கழிவறையைப் பயன்படுத்தச் செல்லும்போது 'காசு' கொடு!' என்று கேட்பது எப்படிச் சரியாக இருக்கும்?

எனவே, கழிவறையைப் பயன்படுததுவோரிடம் கட்டணம் வசூலிக்கும் கொள்கையை மாற்றி, மக்களுக்கு இலவச சுகாதார வசதிக்கான ஏற்பாடுகளைச் செய்து தர வேண்டும் என்று விழுப்புரம் நகராட்சி நிர்வாகத்தை கேட்டுக் கொள்கிறோம.

இவண்.

செயலாளர்,

சோசலிஸ்ட் வாலிபர்

முன்னணி, விழுப்புரம்.

---

# திருப்பத்தூரில் வாலிபர் முன்னணி

வடாற்காடு மாவட்டம் திருப்பத்தூர் நகரில் கடந்த 19—11—76ந் தேதி சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி அமைக்கப்பட்டது.

தாலுகா விவசாயத் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் ஆர் ஏ லெட்சுமணராஜா தலைமையில் நடந்த அமைப்புக் கூட்டத்தில். வடாற்காடு மாவட்ட பீடித் தொழிலாளர் சங்கத் தலைவர் எச் எம அத்தாவுல்லா, செயலாளர் டாக்டர் கே கிருஷ்ணசாமி ஆகியோர் கலந்து கொண்டு வாலிபர் முன்னணி இலட்சியம் குறித்தும், புதிய சமுதாயம்உருவாக்கும் பணியில் இளைஞர்களது பங்குபற்றியும் விளக்கிப் பேசினர்.

பின்னர் முன்னணிக்கு கப்பார்(தலைவர்), ஜாபர்சாதிக் (செயலாளர்), அமீர்(பொருளாளர்) உள்பட 12பேர்கொண்ட நிர்வாகக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

# உலக அரங்கம்

### கர்ட் வால்தீம்
## ஐ. நா. பொதுச் செயலாளராக மீண்டும் நியமனம்

145 நாடுகளை உறுப்பு நாடுகளாகக் கொண்ட ஐ நா பொதுச் செயலாளராக டாக்டர் கர்ட் வால் தீமை ஐ நா பாதுகாப்பு சபை மீண்டும் நியமித்தது. இரண்டாவது முறையாக நியமிக்கப்பட்டுள்ள இவர் மேலும் 5ஆண்டுகாலம் பதவியில் இருப்பார். இவரது நியமனத்தை ஐ நா பொதுச் சபையும் அங்கீகரித்துவிட்டது.

## ஜப்பான் தேர்தல்

ஜப்பான் நாடாளுமன்றத்துக்கு நடந்த தேர்தலில் ஆளும் கட்சியான லிபரல் டெமாக்ரடிக் கட்சிக்கு இறுதிப் பெரும்பான்மை கிடைக்கவில்லை. மொத்தம் 511 உறுப்பினர்களை கொண்ட நாடாளுமன்றத்தில் தற்போது 249 இடங்களைத்தான் கைப்பற்றியுள்ளது.

1972ல் நடந்த தேர்தலில் இக்கட்சி 271 இடங்களைப்பெற்றிருந்தது. இப்போது 14இடங்கள் குறைந்து விட்டன.

சோசலிஸ்ட்கட்சி 123 இடங்களைப் பெற்று எதிர்க்கட்சிகளில் முதலிடத்தில் உள்ளது. கம்யூனிஸ்ட் கட்சி 17 இடங்களை வென்றிருக்கிறது. பௌத்தர்கள் ஆதரவுபெற்ற கோமெய்ட்டோகட்சி 59இடங்களையும், கம்யூனிஸ்ட் எதிர்ப்புத் தன்மை கொண்ட ஜனநாயக சோசலிஸ்ட் கட்சி 29 இடங்களையும், சுயேச்சைகள் 21 இடங்களையும் கைப்பற்றியுள்ளன.

மெஜாரிட்டிக்கு ஆளும் கட்சி 256 இடங்களாவது பெற்றிருக்க வேண்டும். ஆனால், லிபரல் டெமாக்ரடிக் கட்சி 249 இடங்களைத்தான் பெற்றுள்ளது. சுயேச்சைகளோ அல்லது வேறு ஏதேனும் ஒரு கட்சியோ ஆதரவளித்தால்தான் இக்கட்சிமீண்டும் பதவிக்கு வர முடியும். இதுவரை சுயேச்சைகளில சிலர் ஆதரவளிப்பதாக அறிவித்திருக்கிறார்களாம்.

இத்தேர்தலில் தற்போதைய பிரதமர்டோகியோமிக்கி உட்பட அவரது அமைச்சரவையிலிருந்த இரு அமைச்சர்களும், முன்னாள் அமைச்சர்கள் பலரும் தோல்வியுற்றனர். நீதித்துறை அமைச்சர்கள் இனாடா 93 ஓட்டு வித்தியாசத்திலேயே வெற்றிபெற்றுள்ளார்.

லாக்ஹீட் ஊழல் சம்பந்தமாக கைது செய்யப்பட்டு பின்னர் ஜாமீனில் வெளிவந்து விசாரணைக்கு உட்பட்டுள்ள முன்னாள் பிரதமர் தனகாவும், அவருடன் விசாரணைக்குப்பட்டுள்ள முன்னாள் போக்குவரத்து அமைச்சர் ஹாஷிமோட்டோவும் சுயேச்சையாகப் போட்டியிட்டு வெற்றி பெற்றுள்ளனர்.

## பங்களாதேஷ்

பங்களாதேஷில் முன்னாள் அதிபர் கொண்டகர் முஸ்டாக் அகமது உட்பட சுமார் 2000 பேர் கைது செய்யப்பட்டு காவலில் வைக்கப்பட்டுள்ளனர். தேசவிரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டதாக இவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டுள்ளதாம். இந்தக் கைதைத் தொடர்ந்து 61 நகரங்களில் இரவு நேரத்தில் ஊரடங்கு உத்திரவு அமுலாக்கப்பட்டு வருகிறது என்று 'சண்டே டைம்ஸ்' என்ற பிரிட்டிஷ் பத்திரிகையில் செய்தி ஒன்று பிரசுரமாகியுள்ளது.

## அமெரிக்காவுக்கு வியட்நாம் எதிர்ப்பு

இந்துமகாக்கடலில் உள்ள மாசிரா தீவில் மற்றுமொரு இராணுவ தளத்தை அமைக்க அமெரிக்கா திட்டமிட்டுள்ளதற்கு வியட்நாம் கடும் ஆட்சேபம்தெரிவித்துள்ளது. "மாசிரா தீவுத்தளத் திட்டம்" என்பது அரபு தீபகற்பம் மற்றும்பாரசீக வளைகுடா பகுதிகளில் தலையிடும் முயற்சி என்றும், இது யேமன் நாட்டின் சுதந்திரம், அரசியலுரிமை ஆகியவற்றுக்கு அச்சுறுத்தலாகும் என்றும் வியட்நாம செய்தி ஸ்தாபனம் அறிவித்துள்ளது.

## மேற்கு ஜெர்மனியில் அமெரிக்க சிப்பாய்கள் கள்ள வணிகம்

மேற்கு ஜெர்மனியில் அமெரிக்கச்சிப்பாய்கள் கள்ள வணிகத்தில் ஈடுபட்டுள்ளதாக "ஸ்டார்ஸ் அண்ட் ஸ்ட்ரைப்ஸ்" என்ற அமெரிக்க இராணுவ சஞ்சிகை குறிப்பிட்டுள்ளது.

சென்ற ஆண்டில் மட்டும் மேற்கு ஜெர்மனியில், அமெரிக்க சிப்பாய்கள் சம்பந்தப்பட்ட 3400 வழக்குகளை ஜெர்மன் சுங்க அதிகாரிகள் பதிவு செய்துள்ளனர் என்று அந்த பத்திரிகை குறிப்பிடுகிறது.

அமெரிக்க நாட்டுச் சிப்பாய்கள் தங்களுக்கு மலிவு விலையில் கிடைக்கும் விஸ்கி, சிகரெட்டுகள், பெட்ரோல், ஸ்டீரியோ கருவிகள் ஆகியவற்றைக் கள்ளக் கடத்தல் செய்து 5 மடங்கு விலைக்கு விற்கிறார்கள் என்றும் அண்மையில் கூட ஹைடல் பாக் சுங்க அதிகாரிகள், அமெரிக்க சிப்பாய்களிடமிருந்து 4 ஆயிரம் விஸ்கி பாட்டில்களையும், 5ஆயிரம் சிகரெட் பெட்டிகளையும் கைப்பற்றியதாகவும் அப்பத்திரிகை கூறுகிறது.

## அமெரிக்காவில் சூடாக விற்பனை ஆகும் புதிய புத்தகம்

அமெரிக்காவின் ஆலிவுட் நடிகையான மர்லின்மன்ரோ தற்கொலை செய்யப்பட்டதாகத்தான் இதுவரை நம்பப்பட்டு வந்தது. ஆனால், மன்ரோ தற்கொலை செய்துகொள்ளவில்லை கொலை செய்யப்பட்டாள் என்று ஆணித்தரமான பல ஆதாரங்களுடன் ஒரு புத்தகம் வெளியாகியுள்ளது.

காலஞ்சென்ற அமெரிக்க ஜனாதிபதி ஜான்கென்னடி, அவரது சகோதரர் ராபர்ட் கென்னடி ஆகிய இருவருமே மன்ரோவின் இரகசியக் காதலர்கள் என்று இப்புத்தகத்தில் கூறப்பட்டுள்ளது.

இவ்விருவருக்கும் மர்லினின் கொலைக்கும் என்ன சம்பந்தம்? —இது போன்ற பல திடுக்கிடும் தகவல்களைக் கொண்ட இப்புத்தகத்தின் பெயர் "மர்லினைக் கொன்றது யார்?" என்பதாகும்

இப்புத்தகம் அமெரிக்காவில் சூடாக விற்பனையாகிறது.

## கியூபா தலைவராக காஸ்ட்ரோ மீண்டும் தேர்வு

கியூபா நாட்டின் பிரதமராக ஃபிடெல் காஸ்ட்ரோ மீண்டும் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இந்த ஆண்டு பிப் 15-ல் அமுலுக்குக் கொண்டுவரப்பட்ட சோசலிஸ்ட் அரசியல் சட்டத்தின் கீழ் நடந்த முதலாவது தேர்தலில 481 பிரதிநிதிகளைக் கொண்ட மக்கள் பார்லிமெண்டினால் இவர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். புதிய சட்டப்படி இவரே நாட்டின் மிகப்பெரிய பொறுப்பான ஸ்டேட் கவுன்சில் தலைவராகவும் இராணுவத்தின் பிரதம தளபதியாகவும் செயல்படுவார். இவரது இளைய சகோதர டாக்டர் ராவுல் காஸ்ட்ரோ ஸ்டேட் கவுன்சிலின் முதல் துணைத்தலைவராகவும், மற்றும ஐவர் துணைத்தலைவர்களாகவும் 23 பேர் ஸ்டேட் கவுன்சில உறுப்பினர்களாகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## பிரிட்டனுக்கு சென்ற இந்திய டாக்டர்கள் நிலை

நல்ல வேலையும் அதிக ஊதியமும் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் பிரிட்டனுக்கு வந்த இந்திய டாக்டர்கள்வேலை கிடைக்காமல் திண்டாடுகிறார்கள். கடந்த இரு வாரங்களில் 8 டாக்டர்கள் தங்களுக்கு வேலை கிடைக்கும் வரையிலோ அல்லது இந்தியாவுக்கு திரும்புவதற்கோ பண உதவி செய்ய வேண்டும் என்று இந்தியத் தூதுவர் அலுவலகத்திற்கு வந்து முறையிட்டுள்ளனராம். மேலும் பலர் இதுபோன்று வரலாம் என்று கருதப்படுகிறது.

இந்தியாவில் வேலைவாய்ப்புக் கிடைக்காது பிரிட்டன் வரும் இந்திய டாக்டர்களை வேலைக்கு அமர்த்துவதில், பிரிட்டனிலுள்ள 'ஜெனரல் மெடிக்கல் கவுன்சில்' கட்டுப்பாடு விதித்துள்ளதுடன், இந்தியாவில் பெற்ற டாக்டர் பட்டங்களையும் அது அங்கீகரிப்பதில்லை. இதற்கு எதிர் நடவடிக்கையாக, பிரிட்டனில் வழங்கப்படும் டாக்டர் பட்டங்களை அங்கீகரிப்பதில்லை என்று 'இந்திய மெடிக்கல் கவுன்சில்' முடிவு செய்து இருக்கிறது என்பது அறிந்ததே.

## ஜிம்மி கார்ட்டரின் தேர்தல் செலவு
# ரூ. 31.41 கோடி
### சில விவரங்கள்

கடந்த மாதம் நடைபெற்ற அமெரிக்க ஜனாதிபதி தேர்தலில் வெற்றி பெறுவதற்காக திரு ஜிம்மிகார்ட்டர் செய்த செலவுத் தொகை 3கோடியே 49 இலட்சம் டாலர்—அதாவது 31கோடியே 41 இலட்சம்ரூபாய் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்த ஜனாதிபதி தேர்தல் பிரச்சாரம் துவங்கி, தேர்தல் முடிந்தகாலம்வரை— அதாவது 1975 ஜனவரிமுதல் 1976 நவம்பர் முடிய நாள் ஒன்றுக்கு 53 ஆயிரம் டாலர் வீதம்செலவு ஆகியிருக்கிறதாம். இதுசுமார் 4 லட்சத்து 77 ஆயிரம் ரூபாய். நிலக்கடலை விளையக்கூடிய 12 ஆயிரம ஏக்கருக்கும் அதிகமான நிலத்துக்குச் சொந்தக்காரரான இந்த 'விவசாயி', ஜனாதிபதி தேர்தலில் ஜனநாயக்க கட்சி வேட்பாளராக நியமனம் பெறும்வரை அவருக்கு ஆன செலவு ஒரு கோடியே 16 இலட்சம் டாலருக்கும் மேல் (10 கோடியே 44 இலட்சம் ரூபாய்) இதில் 15 இலட்சம் டாலர்—அதாவது ஒரு கோடியே 35 இலட்சம்ரூபாய் இவரது சொந்த மாகாணமான ஜார்ஜியாவில் உள்ள மக்கள் கொடுத்தார்களாம். அதுபோக மூன்றுகோடியே 15 இலட்சம் ரூபாய் மத்திய அரசு இணை நிதியாகும்.

ஜனாதிபதித் தேர்தலுக்கு ஜனநாயகக் கட்சி வேட்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர், தேர்தல் பிரச்சாரத்துக்கு ஆன செலவு எவ்வளவு தெரியுமா? 19 கோடியே 80 இலட்சம் ரூபாய். இந்தத் தொகையும் மத்திய அரசு வழங்கிய இணைநிதியாகும். இதில் பெரும்பகுதி செலவு செய்தி ஏடுகள், வானொலி, தொலைக்காட்சி விளம்பரங்களுக்கான செலவு தான் அதிகம். சுமார் 9 கோடியே 45 இலட்சம் ரூபாய்கள். இதிலும் டெலிவிஷன செலவு மட்டும் 6 கோடியே 75 இலட்சம் ரூபாய்.

இதே அளவுக்கான செலவுதான, ஜனாதிபதி பதவியிலிருந்து கொண்டே ஜனாதிபதிக்கான தேர்தலில் குடியரசுக் கட்சி சார்பில் போட்டியிட்ட திரு. ஜெரால்டு போர்டுக்கும் ஆனதாக அறிவிக்கப்படுகிறது.

இவருக்கும் அரசின் இணைநிதி வழங்கப்பட்டது

### அரசு இணைநிதி என்றால் என்ன?

1972ம் ஆண்டு நடந்த ஜனாதிபதி தேர்தலையொட்டி எழுந்த வாட்டர்கேட் ஊழலின் விளைவாக 1974ம ஆண்டில் அமெரிக்க சமஷ்டி தேர்தல் பிரச்சார சட்டம் என்று ஒருசட்டம் இயற்றப்பட்டது.

ஜனாதிபதியின் பதவிக்கு போட்டியிடுபவர்களின் தேர்தல் செலவு சம்பந்தமாக இயற்றப்பட்ட அந்தச் சட்டத்தை எதிர்த்து அமெரிக்க சுப்ரீம் கோர்ட்டில்வழக்குத்தொடுக்கப்பட்டது. ஆனாலும் அச்சட்டம் செல்லும் என்று 1976 ஜனவரியில் சுப்ரீம் கோர்ட் தீர்ப்பளித்துவிட்டது இச்சட்டத்தின் கீழ் ஜனாதிபதி தேர்தலில் போட்டியிடும் வேட்பாளர் தனது தேர்தல் பிரச்சார செலவுக்கு சமஷ்டி அரசு (பெடரல்) நிதி உதவியைப் பெற்றுக்கொள்ளலாம். அல்லது தாமாகவே செலவு செய்தும போட்டியிடலாம். சமஷ்டி நிதி உதவியை ஒரு வேட்பாளர் பெறுவாராகில் அவருக்கு 210இலட்சம் டாலர் (18கோடியே90லட்சம் ரூபாய்) தரப்படும் அதற்குமேல் அவர் தேர்தல் செலவு செய்யக்கூடாது என்பதாகும்.

தவிர தேர்தல் நிதிக்கென நன்கொடை வழங்குவது பற்றி புதிய விதிகளின்படி ஒவ்வொரு 'பிரைமரி' மற்றும் பொதுத் தேர்தல் ஆகியவற்றில் ஒருவர் ஒரு வேட்பாளருக்கு நேரடியாக ஆயிரம் டாலருக்கு (ரூ9 ஆயிரம்)மேல் அளிக்க முடியாதாம். அந்தச் சமயத்தில்—ஒரு வேட்பாளரின் தேர்தல்பிரசார நடவடிக்கைகளுடன் சம்பந்தப்படாமல் கம்பெனிகளும் யூனியன்களும் தேர்தல் பிரச்சாரத்திற்கு எவ்வளவு வேண்டுமானாலும் செலவு செய்யலாமாம்.

'அரசியல்' செயல்கமிட்டிகளை அமைக்கவும் கம்பெனி மற்றும் யூனியன்கள் எவ்வளவு பணம் வேண்டுமாயினும் செலவிடலாமாம். இந்தக் கமிட்டிகள்—கம்பெனிபங்குதாரர்கள், ஊழியர்கள் மற்றும் உறுப்பினர்கள் சொந்தமாக நன்கொடைகள் அளிப்பதற்கான கருவிகளாகச் செயல்படுகின்றன. இந்தக் கமிட்டிகள் வேட்பாளர்களுக்கு எவ்வளவு தொகை வேண்டுமானாலும் நன்கொடையாக வழங்கலாமாம்.

அமெரிக்காவின் தென்கோடி மாநிலமான ஜார்ஜியா கவர்னரும், 12ஆயிரம் ஏக்கருக்கும் அதிகமான நிலம் வைத்திருக்கும் நவீன பண்ணையும் அதையொட்டிய தொழில்களும் நடத்தும் ஒரு பெரிய முதலாளித்துவ மிராசுதாரரான திரு ஜிம்மிகார்ட்டருக்கு அமெரிக்க இராணுவக்காண்ட்ராக்ட் கம்பெனியான ஜெனரல் டைனமிக்ஸ் ஆதரவு அளித்தது. உலகப் பிரசித்தி

(2 ம் பக்கம் பார்க்க)

# "நியூடைம்ஸ்" பத்திரிக்கைக்கு தோழர் இ. எம். எஸ். மறுப்பு

"நியூடைம்ஸ்" சோவியத் யூனியனின் தலைநகரான மாஸ்கோவிலிருந்து வெளியாகும் வாரஇதழ்; சோவியத் யூனியனின் சர்வேதச அரசியல்பொருளாதாரப்பத்திரிகையாகும். இவ்வருடத்திற்கான 46 வது இதழில் அப்பத்திரிகையின் இந்திய நிருபர் பேவல்விகட்ரோவ் எழுதிய 'இந்தியா; அரசியல் சட்ட திருத்தம்' என்னும் கட்டுரை வெளியாகிருந்தது. அதில்இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யினை 'இணையான கம்யூனிஸ்ட் கட்சி என்று சொல்லப்படுகின்ற கட்சி' (the so called parallel Communist Party) என்றும் இணையான கமயூனிஸ்ட்கட்சி (ParallelcommunistParty) என்றும் குறிப்பிட்டிருந்தார்.

இது சம்பந்தமாகவும், அரசியல் சட்டதிருத்தம் பற்றி இந்தியக்கமயூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) யின் நிலையை அந்நிருபர் திருத்திக் கூறியுள்ளது சம்பந்தமாகவும் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் இ எம் எஸ் நம்பூதிரிபாட், அப்பத்திரிகை ஆசிரியர்க்கு ஒரு கடிதம் ஒன்றை 2—12—76-ல் எழுதியுள்ளார். அக்கடிதத்தில் 'மற்றதொரு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி' என்று தோழர் நம்பூதிரிபாட் குறிப்பிட்டிருப்பது வலதுசாரி கம்யூனிஸ்ட் கட்சிலய குறிப்பதாகும். Parallel Communist Party என்பதற்கு 'போட்டிக் கம்யூனிஸ்ட் கட்சி' என்றும் அர்த்தம் கொள்ளலாம்.

தோழர் இ எம் எஸ் கடிதம் கீழே கொடுக்கப்படுகிறது.

ஃ ஃ ஃ

ஆசிரியர்,
நியூடைம்ஸ்
புஷ்கின் ஸ்குயர்
மாஸகோ, 103782

ஜி எஸ் பி, யு. எஸ். எஸ். ஆர்.

அன்புள்ள தோழர் ஆசிரியர் அவர்களே,

உங்களுடைய பத்திரிகையின் (நியூடைம்ஸ்) 46—வது இதழில் பேவல் விக்டோரோவால எழுதப்பட்ட "இந்தியா: அரசியல சட்டதிருத்தம்" என்னும் கட்டுரை வெளியிடப்பட்டுள்ளது; அதில் படர்ந்து கிடக்கும் சில குறிப்பிட்ட தவறுகளை உள்ளது உள்ளவாறு உங்கள்கவனததிற்குகொண்டு வர விரும்புகிறேன்.

முதலில் அக்கட்டுரை எங்களுடைய கட்சியை "இணையான கம்யூனிஸ்ட் கட்சிஎன்று சொல்லப்படுகிற" என்றுகுறிபபிடுகிறது. "என்று சொல்லப்படுகின்ற" (so called) என்ற வார்த்தையை அக்கட்டுரை ஆசிரியர் உபயோகிக்கும்போது என்ன செய்தியை சொல்ல அவர் விரும்புகிருர் என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனல் இந்தியாவில் எங்களுடைய கட்சியையாரும் "இணையான கம்யூனிஸ்ட் கட்சி" என்று அழைப்பதில்லை என்பதுதான் உண்மை. இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மாாக்சிஸ்ட்)என்றுதான்நாங்கள்குறிபபிடபடுகிறேும், இதே வார்த்தையைத்தான் தேர்தல் கமிஷனும ஏனைய அதிகாரப்பூர்வ ஏஜென்ஸிகளும் கூறுகின்றன. (மற்றெருரு இந்தியக் கம்யூனிஸட்கட்சி உடபட) அனைத்து அரசியல் கட்சிகளின் அரசியல்வாதிகளும், மற்றெருரு இந்திய கம்யூனிஸ்ட் கடசியின பத்திரிகைகள் உட்பட அனைத்துப் பத்திரிகைகளும் எங்களை இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்)என்றே அல்லது வெறுமென "மார்க்சிஸட்" என்றே அழைக்கிறுர்கள்; அழைக்கின்றன.

## ஒரிஜினல் முயற்சி பயனற்றதாகியது

உங்களுடைய பத்திரிகையும், சோவியத் யூனியனிலிருந்து வெளியாகும் ஏனைய பத்திரிகைகளும் 1965ல் எங்களை "பிளவுவாதிகள்" என கண்டிக்கும் ஒரிஜினல் முயற்சிகளை கொண்டிருந்தன; ஆனல் அம்முயற்சிகள் பயனற்றவை என நிரூபிக்கப்பட்டது; எப்படியெனில் 1965ல் கேரளத்தில் நடைபெற்ற இடைத் தேர்தலில், ஒன்றுபட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்கள், நண்பர்கள் ஆகியோரின் மிகப்பெரும் பகுதியினர் ஆதரவை நாங்கள் (இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸட்) அடைந்தோம். மற்றெருரு இந்திய கம்யூனிஸ்ட் கடசியானது புறக்கணிக்கத் தக்க சக்தியாகி விட்டது.

அதன் பின்பே உங்களுடைய பத்திரிகையும், சோவியத் யூனியனிலிருந்து வெளியாகும பத்திரிகைகளும் எங்களை "இணையான கமயூனிஸ்ட் கட்சி" என அழைக்க முடிவு செய்தன.

## மற்றெருரு கம்யூ. கட்சி போனபாதை

இம்முடிவை மேலும் உறுதிப்படுத்தும் வகையில் 1967—69ம் வருட நிகழ்ச்சிகள் இருந்தன; அவ்விரு ஆண்டுகளில் இடதுசாரி நோக்குடைய காங்கிரஸ அல்லாத அரசாங்கங்கள் கேரளத்திலும், மேறகு வங்கத்திலும் ஏற்பட்டன.

அந்த இரு இடதுசாரி கூட்டணி அரசாங்கங்களும் எங்கள் கட்சியின் தலைமையில நடத்தப்பட்டன. ஏனெனில் இடதுசாரி சக்திகளில் எங்கள் கட்சியே மிகப்பெரும் சக்தியாக இருந்தது. ஆனல் அதே காலததில் மற்றெருரு இந்திய கம்யூனிஸ்ட் கட்சி செய்ததென்ன? அக்கட்சியானது பீகார், உத்திரப்பிரதேசம், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில ஜனசங்கம், சுதந்திரா, அகாலிதளம் ஆகிய கட்சிகளுடன் கைகோர்த்துக் கொண்டது.

எங்களை "இணையான இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி"என அழைப்பதற்கான உங்களுக்குள்ள உரிமையை கேள்விக்குரிய தாக்கவில்லை. ஆனல் உங்கள் பததிரிகை. ஏனைய சோவியத் பத்திரிகைகள்தவிர எவர் ஒருவரும் எங்களை 'இணையான கமயூனிஸ்ட் கட்சி" என அழைக்காத போது "இணையான கம்யூனிஸ்ட் கட்சி என்று கூறப்படுகின்ற" என்று எங்களை நீங்கள் குறிப்பிடுவது முறையானதல்ல என்று நான் குறிப்பிடலாமல்லவா?

இரண்டாவதாக. ஒரு புதிய அரசியல் சட்டத்தை



உருவாக்கவோ அல்லது அரசியல் சட்ட திருத்தங்களை பரிசீலனை செய்யவோ அரசியல் நிர்ணய சபை அமைக்கப்பட வேண்டும் என வலதுசாரி சக்திகளும், அதன் கூட்டணிகளும் வற்புறுததுகின்றனர்" என உங்களுடைய நிருபர் (பேவல்விக்டரோவ்) அடித்து கூறுகிருர். அவ்வாறு அவர் கூறுவது உண்மைக்கு மாருனதாகும்.

உண்மை என்ன? காங்கிரஸ் கட்சியினரிலேயே ஒரு பகுதியினர்தான் அரசியல சட்ட நிர்ணயசபை வேண்டுமெனக் கூறினர். அவர்களைத்தான் மற்றெருரு கம்யூனிஸ்ட் கட்சியின் பத்திரிகைகள் "ஆளும் கட்சிக்குள் உள்ள சுயநலமிகள்" என்று கூறின.

அவர்கள் முன்வைத்த திட்டத்தின்படி, அரசியல் நிர்ணய சபை என்பது தற்போதுள்ள இதே நாடாளுமன்றத்தோடு ஒவ்வொரு சட்ட மன்றத்திலிருந்தும் மிகச் சிறிய அளவிலான பிரதிநிதிகளைச் சேர்த்து அமைப்பதுதான் அரசியல் நிர்ண்ய சபையாகும்.

இதனை எங்கள் கட்சி எதிர்த்தது. மாருக பிரஜா உரிமைகள் முழுமையாக மீண்டும் கொண்டுவரப்பட்டு விகிதாச்சார பிரதிநிதித்துவ அடிப்படையில தேர்ந்தெடுக்கபபடும் அரசியல் நிர்ணயசபையையேஎங்கள்கட்சி கோரியது. அனைத்துஎதிர்க்கட்சிகளும் நேரடியாகவே, அரசியல நிர்ணயசபைக்கான கருத்தை எதிர்த்தன; அதாவது, அரசியல நிர்ணய சபை சமபந்தமாக காங்கிரஸ் கட்சியினரில ஒரு பகுதியினரால் உருவாக்கப்பட்ட கருத்திற்கோ அல்லது எங்களால் முன்வைக்கப்பட்ட கருத்திற்கோ அவர்கள் ஒப்புதல் அளிக்கவில்லை என்பதாகும்.

மற்றெருரு இந்தியக் கம்யூனிஸ்ட் கடசி தவிர இந்தியாவில் காங்கிரஸ் அல்லாத ஒவ்வொரு கட்சியும் தற்போதைய நாடாளுமன்றத்தின் உரிமையை எதிர்த்தன என்பது உண்மை. ஏனெனில், தற்போதைய நாடாளுமன்றம் 1971-ல் தேர்ந்தெடுககப்பட்டு 5 வருடங்களுக்குப் பிறகு நீடிக்கப்பட்டதாகும். அரசியல்சட்ட திருத்தங்களை அவசர அவசரமாக ஏற்படுத்துவதற்கு அவசரநிலைமூலம்செயற்கை மூச்சு அளிக்கப்பட்டு நாடாளுமன்றம் நீடித்துக் கொணடிருக்கிறது. மேலும் அவர்கள் (எதிர்க்கட்சியினர்) அரசியல் சட்ட திருத்தத்தின் சாராம்சத்தையே எதிர்த்தனர். ஏனெனில், இந்த அரசியல் சட்ட திருத்தங்களானது, பெரும் அதிகாரத்தையும் உரிமையையும் கொண்ட நிர்வாக யந்திரத்தை பதவியில் அமர்த்துவதாகும் என்றும், இதனை "நாடாளுமன்றத்தின் மேலாதிக்கம் என்பதை பலமாக பிரகடனம் செய்துகொண்டு" தவருன முறையில் செய்வதாகும்என்று அவைகள் (எதிர்க்கட்சியிகள்) குறிப்பிட்டன. ஆனல், உங்கள் நிருபர் கூறியதுபோல் அவர்களில் ஒருவர்கூட அரசியல் நிர்ணயசபை அமைக்க வேண்டும் என்பது பற்றி கொஞ்சங்கூட் கவலைப்படவில்லை.

## எங்கள் கட்சி ஒன்றுதான்

ஒரு புதிய அரசியல் நிர்ணயசபையை உருவாக்குவதற்கு சுதந்திரமான, நியாயமான தேர்தல் நடத்தப்பட வேண்டும் என்ற கோரிக்கையை முன் வைத்தும் தற்போதைய நாடாளுமன்றத்தை அரசியல்நிர்ணயசபையாகமாற்றுவதை எதிர்த்ததுமான ஒரே கட்சி எங்கள்கடசிதான், இது கூட, ஏற்கனவே மேலே கூறப்பட்டதைப்போல, ஏனைய காங்கிரஸ் அல்லாத கட்சிகளால் ஏற்றுக் கொள்ளப்பட்வில்லை, எனவே, வலது சாரி சக்திகளும் அதன் கூட்டாளிகளும் ஒரு புதிய அரசியல் நிர்ணயசபையை வற்புறுத்தின என உங்கள் நிருபர் கூறியிருப்பது உண்மையை திரித்து கூறுவதாகும்.

## மற்றெருரு கம்யூ. கட்சியும் எதிர்க்கவில்லையா?

மூன்ருவதாக, 'தற்போதைய நாடாளுமன்றத்தின் காலத்தை 2-வது தடவையாக நீடிக்க அரசாங்கம் எடுத்த முடிவை எதிர்த்தவர்கள்" "சோசலிஸ்ட் கட்சியினருடனும் இணையான கம்யூனிஸ்ட் கட்சியுடனும் ஒன்று சேர்ந்த வலது சாரி எதிர்க்கட்சியினர்" தான் என்ற கருத்தை உருவாக்க உங்களுடைய நிருபர் முயற்சிக்கிருர். அவர், இந்திய தினசரிப் பத்திரிகைகளையோ அல்லது நியூ ஏஜையோ (நியூ ஏஜ், வலது கம்யூனிஸ்ட் கட்சியின ஆங்கில வாரப்பத்திரிகை) படிப்பதற்கு கவனம் எடுத்திருந்திப்பாரேயானல், தற்போதைய நாடாளுமன்றத்தின் காலத்தை நீடிப்பதற்கு அரசாங்கம் எடுத்த முடிவை மற்றதொரு இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி கடுமையாக விமர்சித்தது என்பதை அவர் பார்த்திருக்க முடியும்.

இந்தியாவின் அரசியல் வளர்ச்சிகளைப் பற்றி எழுதும் ஒரு நிருபர் இந்திய தினசரி பத்திரிகைகளையும் நியூ ஏஜையும் படிப்பதற்கு வாய்ப்பில்லாமல் இருந்தார் என்பதை நம்புவதற்கே கஷ்டமாக இருக்கிறது. எனவே, இதுசம்பந்தமாக (தற்போதைய நாடாளுமன்ற ஆயுளை நீடித்தது சம்பந்தமாக) அரசாங்கம் எடுத்த நடவடிக்கைகளை எதிர்த்த கட்சிகளின் பட்டியலிலிருந்து மற்றெருரு இந்திய கம்யூனிஸ்ட் கட்சியை நீக்கியதையும் வலதுசாரி எதிர்கட்சிகளோடு எங்களது கட்சியையும், சோசலிஸ்ட் கட்சியையும் இணைத்ததையும் புரிந்து கொள்ள முடியும. அது என்னவெனில், இந்திய நாடாளுமன்றத்தை நீடிப்பதற்கு அரசாங்கம் எடுத்த முடிவிற்கு மற்றெருரு கம்யூனிஸ்ட் கட்சி உட்பட நாட்டில் உள்ள அனைத்து முற்போக்கு சக்திகளும் ஆதரித்தன என்றும் எங்களுடைய கட்சி (இந்தியகம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்) வலதுசாரி எதிர்க்கட்சிகளுடன் கைகோர்த்தது என்றும்—நிரூபிக்க முடியாத இவ்விஷயங்களை—நிரூபிப்பதற்கான உங்களுடைய நிருபரின் ஆர்வமே அது.

உண்மை மீதான அக்கறையினலும், உங்களுடைய வாசகர்களின் தெளிவுக்காகவும், அக்கட்டுரையில் ஏற்பட்ட தவருன அபிப்பிராயத்தை சரிபபடுத்துவீர்கள் என நம்புகிறேன், எனினும் எங்களுடைய கட்சி உறுப்பினர்கள் எங்களுடைய கட்சிபத்திரிகைகளின் வாசகர்கள் உட்பட இந்தியாவில் ஏராளமான வாசகர்கள் உங்களுடைய பத்திரிகைக்கு இருப்பதால், எங்களுடைய கட்சியின் மத்திய, மாநில பத்திரிகைகளில் இந்த கடிதத்தை வெளியிடுகிறேன்.

உங்களது
சகோதரத்துவமிக்க
இ. எம். எஸ். நம்பூதிரிபாட்,
உறுப்பினர், பொலிட்பீரோ.
இந்தியக்கம்யூனிஸ்ட்கட்சி
(மார்க்சிஸ்ட்)

---

## ஒருங்கிணைப்புக் குழு கூட்டம்

(7ம் பக்கத் தொடர்ச்சி)

தொழிலாளர்களது பிரச்சினைகள் பற்றி பேசினர்.

### வெள்ளத்தால் பாதிக்கப்பட்டோருக்கு அனுதாபம்

சென்னை மாநகரிலும் அதன் சுற்றுப் பகுதிகளிலும் அண்மையில் ஏற்பட்ட வெள்ளக் கொடுமைக்கு பலியான-பாதிக்கப்பட்ட மக்களுக்கு இக்கூட்டம் தனது அனுதாபத்தைத் தெரிவித்துக்கொண்டது.

### பி.அண்ட் சி மில்

இந்த வெள்ளத்துக்குப் பின்னர், நவம்பர் 25-ந் தேதி முதல் செயல்படாமலிருக்கும் பி அண்ட் சி மில் விரைவில் தனது மாமூல் வேலையைத் துவங்கும் வகையில் விரைவான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று கோரும் ஒரு தீர்மானமும்நிறைவேற்றப்பட்டது

### மீண்டும் டிச 27ல் சென்னையில் கூடுகிறது

இந்த ஒருங்கிணைப்புக்குழு, மேற்கொண்டு நடவடிக்கைகள் பற்றி முடிவு செய்ய, வருகிற டிசம்பர் 22-ந்தேதி மீண்டும சென்னையில் கூடுவது என்றும் முடிவு செய்யப்பட்டது.

# ஒரிசா, மே. வங்கம் காங்கிரசுக்குள் கோஷ்டி தகராறுகள்

ஒரிசா மாநில காங்கிரசில் ஏற்பட்டுள்ள கோஷ்டித்தகராறு, இன்றைய தினசரிப் பத்திரிகைகளில் தினசரி இடம்பெற்று வருகிறது. அம்மாநில முதலமைச்சர் திருமதி. நந்தினி சத்பதிக்கு எதிராகவும், ஆதரவாகவும இரு கோஷ்டிகள் செயல்படுகின்றன. திருமதி. நந்தினி சதபதிக்கு எதிரான கோஷ்டி, அவரை பதவியிலிருந்து இறக்கும் முயற்சியில் தீவிரமாக இறங்கியுள்ளன.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்புவரை ஒரிசா முதலமைச்சரான நந்தினி சத்பதி, அம்மாநிலக் காங்கிரசின் தலைவராகவும் இருந்தவர். அவர் இரு பதவிகளையும் கொண்டிருப்பதை எதிர்த்து, அம்மாநிலக் காங்கிரசுக்குள் எதிர்ப்பு கிளப்பப்பட்டது. பின்பு, கட்சித்தலைவர் பதவியை, தனது நம்பிக்கைக்குரிய ஒருவருக்கு மாற்றினார். எனினும், அவர்மீதான எதிர்ப்பு குறையவில்லை.

திருமதி நந்தினிசத்பதிக்கு எதிரான கோஷ்டியில் முன்னணியில் இருப்பவர், விஜயக ஆச்சார்யா என்பவரும் கானுச்சரன்லெங்கா என்பவரும் ஆவர். இவ்விருவரும் திருமதி. நந்தினி சத்பதியின் அமைச்சரவையில் அமைச்சர்களாகஇருப்பவர்கள்தான். சமீபத்தில் கௌஹாத்தியில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் மாநாடு நடைபெற்றதல்லவா? அது முடிந்த சில நாட்களில் நவம்பர் 27-ல் இவ்விருவரும் அமைச்சரவையில் பதவி குறைப்பு செய்யப்பட்டனர். இதன்பின், திருமதி நந்தினிசத்பதி எதிர்ப்புக் கோஷ்டியின் நட்வடிக்கைகள் மேலும் தீவிரமடைந்தன.

## நந்தினி மீது குற்றச்சாட்டுகள்

இதன் தொடர்ச்சியாக, அவர் மீது ஊழல் குற்றச்சாட்டு உட்பட பலவேறு குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டன. முதலமைச்சராகஇருக்கும் திருமதி நந்தினி சத்பதி, பல இலட்சக்கணக்கான ரூபாய்கள்மதிப்புள்ள கட்டிடம் ஒன்றை கட்டி அரசாங்கத்திற்கே வாடகைக்கு விட்டுள்ளார் என்றும் அம்மாநிலத்தின் தலைநகரான புவனேஸ்வரத்தில், வேறு எந்தக் கட்டிடமும் அவ்வளவு வாட்கைக்கு விடப்படவில்லை என்பதும் அவர் மீதுள்ள ஒரு குற்றச்சாட்டாகும்.

மத்திய அரசுக்கு எதிராக செயல்படுகிறார்; அமைச்சரவையில் செய்த மாற்றம் சம்பந்தமாக பிரதமரையே கலந்து செய்யவில்லை என்றும் இளைஞர் காங்கிரசுக்கு எதிராக அம்மாநிலத்தில்இளைஞர்கள் மாணவர்கள்கூட்டுக்கமிட்டிஎன்னும் ஸ்தாபனத்தை தனது மகன் தாதாகாடாசத்பதி தலைமையில் அக்டோபர் மாதத்திலிருந்து உருவாக்கியுள்ளார் என்றும் சஞ்சாய்காந்தியின் 5 அம்சத் திட்டங்களுக்கெதிராக செயல்படுகிறார் என்றும் தனது வீட்டில் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு விருந்தளித்து அவர்களிடம் தனக்கு ஆதரவாக கட்டாய கையெழுத்து வேட்டையை நடத்துகிறார் என்றும் அவரது எதிர்ப்பு கோஷ்டியினர் குற்றஞ்சாட்டியுள்ளனர்.

## இளைஞர் காங்கிரசும் எதிர்ப்பு

மேலும், சத்பதி, அம்மாநில சட்டமன்ற உறுப்பினர்கள் பெரும்பாலோரின் ஆதரவை இழந்துவிட்டனர்எனவே பிரதமர் உடனடியாக ஒரிசா காங்கிரஸ் விவகாரத்தில் தலையிட்டு மாற்று முதல் அமைச்சருக்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று கூறினர். இதன் தொடர்ச்சியாக விஜயக் ஆச்சார்யா பல்வேறு தடவைகள் டெல்லிக்கு பறந்தார். பிரதமரையும் ஏனைய மத்திய அமைச்சர்களையும் சந்தித்துப் பேசினார். புதிய முதல் அமைச்சராக விஜயக் ஆச்சாரியாவே வருவார் என்ற பேச்சும் அடிபட்டது.

மேலும் அம்மாநில இளைஞர் காங்கிரசின் தலைவரும் பொதுச் செயலாளர்களும் திருமதி நந்தினி சத்பதிக்குஎதிராக உள்ளனர்.

## நந்தினியின் மறுப்பு

ஆனால் திருமதி நந்தினி சத்பதி, தான் சஞ்சாய் காந்தியின் 5 அம்சத்திட்டங்களுக்கு எதிராகச் செயல்படவில்லை. என்றும் தனக்கு ஆதரவாக தான் சட்டமன்ற உறுப்பினர்களிடம் கட்டாயக் கையெழுத்து வாங்கியதாக கூறுவது பொய் என்றும் கூறியுள்ளார்.

"இன்று ஒரிசா அரசியல் நிலைமை கடுமையானதாகவும் நிலையற்றதாகவும் உள்ளது. ஆளும கட்சியானது கடும் முரண்பாடான இரு கோஷ்டிகளாக வெளிப்படையாக பிரிந்துள்ளது. இந்நிலைமை மாநிலத்தின் நிர்வாகத்தை ஸ்தம்பிக்கும் நிலையில் வைத்துள்ளது. அம்மாநிலத்தின் பெரும் பகுதியில் பரவியுள்ள வறட்சியை சந்திக்கும் வகையிலான நட்வடிக்கைகள் எடுக்கப்படுவது சந்தேகமே என பொறுப்புள்ளவர்கள் உணர்ந்துள்ளனர்."

'டைம்ஸ் ஆப் இந்தியா'

ஒரிசா காங்கிரசுக் கட்சியின் இரு கோஷ்டியினரும் மாறி மாறி அறிக்கைகள் விடுவதும் டெல்லிக்கு பறந்து கொண்டிருப்பதுமாக உள்ளனர். இரு கோஷ்டியினரும் கவர்னரைச் சந்தித்தனர்.

ஒரிசா சட்டமன்ற காங்கிரசில் ஏற்பட்டுள்ள கோஷ்டி சண்டையின் தொடர்ச்சியாக டிச 11ல் அம்மாநிலக் கவர்னர் டெல்லி சென்றார். பிரதமர், உள்துறை அமைச்சர் ஆகியோர்களை சந்தித்து பேசினார்.

ஏற்கெனவே, தனக்கு காங்கிரஸ் கட்சியின் மேலிடத் தலைமையின் ஆதரவு தனக்கு இல்லை என்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது என்று கேட்ட திருமதி நந்தினிசத்பதியும் 12ந்தேதி டெல்லிக்கு சென்றுள்ளார்.

எனவே ஒரிசா காங்கிரஸ் கட்சியின் விவகாரம் அம்மாநிலத்தின் தலைநகரான புவனேஸ்புரத்திலிருந்து இந்திய தலைநகர் டெல்லிக்கு சென்றது.

நந்தினி சத்பதிக்கு ஆதரவான அறிக்கைகளும் எதிரான அறிக்கைகளும்டெல்லியிலிருந்து வந்து கொண்டிருந்தன. இதனை ஒரிசா மாநிலத்தின் நாடாளுமன்ற உறுப்பினர்கள் செய்து வந்தனர். மாநிலத்தில் சட்ட ஒழுங்கு பிரச்சினை ஏற்பட்டுள்ளது என எதிர்ப்புக் கோஷ்டியினர் அறிக்கை வெளியிட்டனர்.இதனை மறுத்துமாநிலத்தில் எப்போதும்போல் வாழ்க்கை நடந்து கொண்டிருப்பதாக நந்தினி சத்பதிக்கு ஆதரவான நாடாளுமன்ற உறுப்பினர்கள் அறிக்கை விட்டுள்ளனர்.

டெல்லிக்கு பறக்கும்முன்பு புவனேஷ்வரத்தில் விடுத்த அறிக்கையொன்றில், "எதிர்க் கோஷ்டியினருக்கு மெஜாரிட்டி ஆதரவு கிடைக்கவில்லையாதலால், என்னுடைய ராஜினாமாவின் மூலம் மாநிலத்தில்முறையான அரசாங்கம் ஏற்பட உறுதி செய்ய முடியும் என வாதாடுகின்றனர். இந்தவாதம் முட்டாள்த்தனமாகும்" என நந்தினி சத்பதி கூறியுள்ளார்.

## பிஜு பட்நாயக்

ஒரிசா காங்கிரஸ் கட்சியின் இக்கோஷ்டித் தகராறில் அம்மாநில பிரமுகரும், அம்மாநில முன்னாள்முதல்அமைச்சரும், பாரதீயலோக்தளத்தின் தலைவரும் சமீபத்தில் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டவருமான பிஜுபட்நாயக், முதல்மைச்சர் நந்தினி சத்பதிக்கு எதிராக பேசிவருகிறார். வறட்சி நிலவி வருகிறது என்றும் நத்தினி சத்பதியின் ஆட்சி அதற்கு பரிகாரம்காண முயற்சிக்கவில்லையென்றும் மாநிலத்தில் சட்ட் ஒழுங்கு பிரசசினை ஏற்பட்டுள்ளது, என்றும் ஜனாதிபதி ஆட்சியை ஏற்படுத்த வேண்டும் என்றும கூறியும் வற்புறுத்தியும் வருகிறார். சத்பதிக்கு எதிரான கோஷ்டியினருக்குஇவர் ஆதரவு தெரிவித்து வருகிறார்.

# மேற்குவங்கம்

மேற்குவங்க காங்கிரசிற்குள்ளான கோஷ்டிச் சண்டை மீண்டும் ஆரம்பித்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. அம்மாநில முதலமைச்சர் சித்தார்த்தசங்கரரே பதவியிலிருந்து விலக வேண்டும் என்ற கோரிக்கையை அவரது எதிர்க் கோஷ்டியினர் வற்புறுத்துகின்றனர்; அதன் பொருட்டு பிரதமர் இந்திரா காந்தியையும், —ஏனைய காங்கிரஸ் உயர்மட்டத் தலைவர்களையும் சந்தித்துப் பேச அடிக்கடி டெல்லிக்கு பறக்கின்றனர்,

ஏற்கெனவே இருந்து கோஷ்டி பூசலின் தொடர்ச்சியாக செப்டம்பர் 18ல் மேற்கு வங்க மாநில காங்கிரஸ் கட்சியின் முக்கிய தலைவர்கள் டெல்லியில் கூடினர். ஒற்றுமை மாநாடு என்றபெயரில் பிரதமர் இந்திராகாந்தி முன்னிலையில் நடைபெற்றது.அம்மாநாட்டின் தொடர்ச்சியாக கோஷ்டி தகராறுகள் தற்காலிகமாக நிறுத்தப்பட்டிருந்தது.

ஆனல், "தற்போது,அமைச்சரவை கூட்டத்தில் கூட அனைத்து அமைச்சர்களும் பங்கெடுக்கமுடியாத அளவுக்கு தகராறு முற்றியுள்ளது. எனவே, நிர்வாகம் சம்பந்தமான பல முக்கிய முடிவுகள் நிறுத்தி வைக்கப்பட்டுள்ளன."
(இந்தியன் எக்ஸ்பிரஸ் டிச.1)

ஏனெனில், இக்கோஷ்டி சண்டையில் சித்தார்த்த சங்கர ரே அமைச்சரவையில் அமைச்சர்களாக இருப்பவர்களே அவருக்கு எதிராக உள்ளனர். அம்மாநில மின்சார, பாசன இலாகா அமைச்சர் கானிகான் சௌத்ரி, தொழில் இலாகா அமைச்சர் தாரன் காந்திகோஷ் ஆகியோர் முதலமைச்சர் ரே-யை எதிர்க்கும் அமைச்சர்களாவர். இவர்கள் தவிர அம்மாநில காங்கிரஸ் கட்சியின் தலைவர் அருன் மொய்த்ரா, பொதுச்செயலாளர் நூருல் இஸ்லாம் ஆகியோரும் ரே-யுக்கு எதிரான அணியில் முன்னணியில் இருப்பவர்கள.

இவர்கள் அனைவரும், சித்தார்த்த சங்கர்ரேயை முதலமைச்சர் பதவியிலிருந்து நீக்க வேண்டுமெனவும் வேறுப்பட்ட் கோஷ்டியினரின் நம்பிக்கைக்குரிய ஒருவர் முதலமைச்சராகவேண்டுமெனவும் பிரதமரை சந்தித்து கோரினர், இவர்களோடு மத்திய அரசாங்கத்தின் வர்த்தக அமைச்சர்களாக இருக்கும் சட்டோபாத்தியாவும், பிரணப் முகர்ஜியும் மேற்குவங்கப் பிரச்சினை சம்பந்தமாக பிரதமரை சந்தித்தனர். இவர்கள் இருவரும் மேற்கு வங்கத்தைச் சேர்ந்தவர்கள்.

செப்டம்பர் 18-ல் டெல்லியில் ஒற்றுமை மாநாடு நடைபெற்றபோதே, சித்தார்த்த சங்கரரேயுக்கு பதிலாகமுதலமைச்சர் பதவிக்கு பிரணப்முகர்ஜியின் பெயரும் தாருன்காந்தி கோஷ் பெயரும் அடிபட்டன.

பிரதமரை இவர்கள் அனைவரும் சந்தித்தபிறகு, கானிகான் சௌத்ரி, நிருபர்களிடம் 'முடிவில், நாங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறோம்' என்று கூறினார். ஆனல் அவர்களுக்கும் பிரதமருக்குமிடையே நடைபெற்ற பேச்சுவார்த்தை விபரம் சம்பந்தமாக எதுவும் அவர் கூற மறுத்து விட்டார்.

## பிரதமரின் பேச்சும் காங்கிரசாரின் வரவேற்பும்

நவம்பர் மாதத்தில் கௌகத்தியில் நடைபெற்ற காங்கிரஸ்கமிட்டி மாநாட்டின்போது ஒரிசா முதலமைச்சருக்கெதிராக அம்மாநில பிரதிநிதிகள் புகார்களை கூறியது போல மேற்கு வங்க காங்கிரசாரும் சித்தார்த்த சங்கரேயுக்கு எதிராக புகார்களை கூறினர்.

"முதலமைச்சர்கள் தங்களுடைய சக அமைச்சர்களையும், கட்சியினரையும் புரிந்து கொள்ள முடியாவிட்டால் அவர்கள் தொடர்ந்து பதவியில் நீடிக்க தான் எவ்வித உதவியும் செய்ய முடியாதுஎன்று பிரதமர் தெளிவாகக் கூறினார். இவ்வாறு அவர் கூறியபோது மேற்கு வங்கத்திலிருந்தும் ஒரிசாவிலிருந்தும் வந்திருந்த காங்கிரசார் மகிழ்ச்சியாக ஆரவாரஞ் செய்து வரவேற்றனர்."

'பிஸ்னஸ்ஸ்டான்டர்டு, நவ. 23

கௌஹாத்தி மாநாட்டுக்குப் பிறகே, சித்தார்த்த சங்கரரேயுக்கு எதிரான கோஷ்டிகள் தீவிரமாக வேலை செய்ய ஆரம்பித்துள்ளன. டெல்லிக்குப் பறப்பதும் காங்கிரஸ் கட்சியின் உயர்மட்டத் தலைவர்களை சந்திப்பதும் உடனடியாக கட்சித் தலைமை தலையிட வேண்டும் என வற்புறுத்துவதும் அதிகரித்துள்ளன. மேலும் சித்தார்த்த சங்கரரேயுக்கு எதிராக தனித்தனியாகவும் கூட்டாகவும் அறிக்கைகள் விடப்படுகின்றன.

## ரே கோஷ்டியின் சுறுசுறுப்பு

டிசம்பர் 12-ந்தேதிய சமாச்சர் செய்தியின்படி. ரேயின் எதிர்க்கோஷ்டியைச் சேர்ந்த கோபிந்த சந்திரா நாஸ்கர் என்னும் அமைச்சர் "அனைத்து அரசாங்க வேலைகளும் ஸ்தம்பித்து விட்டன" என்று நிருபர்களிடம் கூறினர். அவர் மேலும், டெல்லி உடனடியாக தலையிடும் என்று தான் நம்புவதாகவும் "அத்தலையீடு 'எங்களுக்கு சாதகமாக' இருக்கும் என்பதற்கான அறிகுறிகள் உள்ளனஎன்றும் கூறினர்,

எனினும் சித்தார்த்த சங்கரே கோஷ்டியினரும் தீவிரமாக உள்ளனர். சித்தார்த்த சங்கரேயை பதவியிலிருந்து நீக்க "சதி" நடப்பதாக அவர்கள் குற்றஞ்சாட்டியுள்ளனர். அத்தகைய நட்வடிக்கைகளில் ஈடுபடுவதாக சில அமைச்சர்களின் பெயர்களை குறிப்பிட்ட் சித்தார்ந்த சங்கரே ஆதரவாளர்கள். அவர்களை பதவியிலிருந்து நீக்கும் வகையில் அமைச்சரவையில் மாற்றம் செய்யுமாறு ரேயை வற்புறுத்துகின்றனர்.

---

## சிறப்புக் கூட்டத்தில் ரூ. 100 கட்சி நிதியளிப்பு

கடந்த 25—11—76-ந்தேதி பொன்னமராவதியில் பஸ் ஸ்டாண்ட் தென்புரம் உள்ள திருமண மண்டபத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சிறப்புப் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் கே. பழனிச்சாமி தலைமைவகித்துப் பேசும்போது, நெசவாளர்களின் நிலைமைகளை விளக்கினர்.

கட்சியின் மாவட்டப் பொறுப்பாளர் டி.கே. ரெங்கராஜன், பெரி. குமாரவேல் ஆகியோர் இன்றைய அரசியல் நிலை குறித்து விளக்கவுரை ஆற்றினர்கள்.

மாவட்ட,'ஸ்தல நிலைகளைப் பற்றி மாவட்ட விவசாயிகள் சங்கச் செயலாளர் எம். மாரியப்பன், கே. சின்னையா, எம். இ. சண்முகம், கே. கிருஷ்ணன், பி. எல். சுப்பையா, கே. ஆரோக்கியசாமி ஆகியோர் பேசினர்.

இக்கூட்டத்தில் கட்சி நிதிக்காக ரூ. 100 வழங்கப்பட்டது.

★ புயல் வெள்ளப்பெருக்கு ★ வறட்சிநிலை ★ காவேரிநதி நீர்ப்பங்கீடு உணவு கொள்முதல் ★ குறைந்தபட்சக் கூலி ★ கடன்நிவாரண-ஒத்திவைப்பு சட்டம் ★ குத்தகை விவசாயிகள் ★ புதிய வரிகள் ★ விளை பொருட்களுக்கு நியாய விலை போன்ற

# விவசாய மக்களின் கோரிக்கைகள் -- பிரச்னைகள் பற்றி

# தமிழ்நாட்டு விவசாயிகள் சங்கம் அறிக்கை

தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் நிர்வாகக் குழுக் கூட்டம்கடந்த 2, 3 தேதிகளில் சங்கத் துணைத்தலைவர் தோழர் என். சங்கரய்யா தலைமையில் மதுரையில நடந்தது. அப்போது, அண்மைக் காலத்தில் விவசாயிகள்—விவசாயத் தொழிலாளர்களது கோரிக்கைகள் மற்றும் பிரச்னைகள் குறித்தும் அது சம்பந்தமாக அரசு மேற்கொள்ளவேண்டிய நடவடிக்கைகள் பற்றியும் விவாதிக்கப்பட்டு பின்வரும் அறிக்கை வெளியிடப்பட்டது:

## அனுதாபம்

தமிழகத்தில் கடந்த 3 ஆண்டு காலமாக வறட்சி நிலை நீடித்தது. அதன் கோரப் பிடியிலிருந்து தப்புவதற்குமுன் கடந்த மாதம புழுதிப்புயலும், புயலும், வெள்ளப் பெருககும் சேர்ந்து சில மாவட்டங்களில் பெரும நாசத்தை விளைவித்துள்ளது. சென்னை நகரம உட்பட வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டுஉயிரிழந்து, உடைமைகளை இழந்து, துன்பதுயரங்களுக்கு ஆளான மககளுக்கு இககூட்டம தனது ஆழந்த அனுதாபத்தைத தெரிவித்துக கொள்கிறது.

## அரசு மேற்கொள்ளவேண்டிய நிவாரணப் பணிகள்

இராமநாதபுரமமாவட்டத்தில் சேத்தூர பகுதியும—நெல்லை மாவட்டத்தில் சிவகிரிப் பகுதியும்—மதுரை மாவட்டத்தில் தேவாரம— பொட்டிபபுரம், ஆண்டிபட்டி, பகுதிகளும், புழுதிபபுயலால் பாதிககப்பட்டுள்ளன. குறிப்பாகசென்னை—செஙகை மாவட்டங்களும், கோவை மாவட்டததில் திருப்பூர் பகுதியும புயலாலும் வெள்ளத்தாலும பாதிககப்பட்டுள்ளன.

இப்பகுதிகளில், பழுதுபட்ட நிலஙகளைப் பண்படுத்தவும் தூர்ந்துபோன கிணறுகளை மராமதது செய்யவும், உடைகதுபோன ஏரிகுளங்களை பழுதுபாககவும் வேண்டும். வீடுகளையும உடைமைகளையும் இழநதவாகளுக்கு அனைதது நிவாரண உதவிகளையும் செய்ய வேணடும. வெள்ள அபாயமுள்ள பள்ளமான பகுதிகளில் குடியிருககும குடிசை வாழ் மக்களுக்கு படிப்படியாக வேறு மாறறு இடஙகள் கொடுகக வேணடும. உயிரிழந்த குடும்பஙகளுககும், கால்நடைகளை இழந்தவாகளுக்கும வீடுகளை இழந்த குடும்பங்களுக்கும் போதுமான நட்டஈடு வழஙக வேணடும, வெள்ள நிவாரண நிதிககு அனைததுப் பகுதி மககளும நிதி உதவி செய்ய வேண்டும என்று வேண்டிக கொள்கிறோம்.

## வறட்சிப் பகுதிகளில்

கடுமையான புயல்வீசி வெள்ளப்பெருக்கு ஏற்பட்டு பாதித்திருக்கும் காலத்திலேயே தமிழ் நாட்டின் சில பகுதிகளில் போதுமான மழை இல்லாமல் வறட்சி நிலை நீடிக்கிறது. கடந்த 3 ஆண்டு காலமாக மதுரை, இராமநாதபுரம், தர்மபுரி, புதுக்கோட்டை மாவட்டங்களும்— கோவை மாவட்டத்தின வடக்குப்பகுதி, தாராபுரம வட்டம் மூலனூர் பிர்க்கா, கோபித் தாலுகா நம்பியூர் பிர்க்கா மற்றும் பல்லடம், அவிநாசி பகுதிகளும்— திருச்சி மாவட்டத்தில் அவரக்குறிச்சி, தாந்தோனி மலை யூனியன் பகுதிகளும்—நெல்லை மாவட்டம் நாங்குனேரி, சங்கரன்கோவில், கோவில்பட்டி, விளாத்திகுளம் தாலுகாக்களும்— ராதாபுரம சப்-தாலுகா பகுதிகளும் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளன. இந்தப் பகுதிகள் வறட்சிப் பகுதிகளாககாட்சியளிக்கின்றன. இதனால், இப்பகுதிகளில் பூமிக்கடியில உள்ள நீரூறறுக்கள் மேலும் மேலும் ஆழமாகப் போய்க்கொணடிருககின்றன.

## இலவச துணி—உணவும் வரிகள் தள்ளுபடியுல்

எனவே, இப்பகுதியில் உள்ள நிரந்தரவறட்சிநிலையை போக்குவதறகான விசேஷத திட்டங்களை மாநில — மததிய அரசுகள் மேற்கொளள வேண்டும்.

உடனடியாக இப்பகுதிகளில் குழந்தைகளுக்கு இலவசமாக சததுணவும போஷாக்கும அளிககும் மாத்திரைகளும வழங்க வேண்டும். மலிவு விலையில உணவுப் பொருள்கள், துணி முதலியவை வழங்கப்பட வேண்டும். நிலவரி, செஸ், சர்சாஜ், தண்ணீர்வரி உள்பட எல்லா வரிகளும சிறு நில உடைமையாளரகளுக்கு நீககபபட வேணடும. இந்த விவசாயிகள் பட்டிருககும் தனியார் கடன, கூட்டுறவு கடன, அரசு, தேச உடைமையாககபபட்ட வங்கிகளில் பெற்றுள்ள கடன் ஆகிய அனைததையும் ரதது செய்வதுடன், அவர்களுககு விசேஷக் கடன் உதவிககும வேலை வாய்பபுக்கும் வழி செய்து உதவ வேண்டும்.

## காவேரி நீர் பிரச்னை

காவேரி பாசனப் பகுதிகள் இவ்வாண்டும்பாதிக்கபபட்டது. காவேரி தண்ணீர் தகராறு பிரச்னையைத தாமதமின்றி விரைவாக மத்திய அரசு தீர்தது வைக்க வேண்டும். இதறகாக மததிய அரசு நியமிததுள்ள சமரசக் குழுவின் வேலையைத் துரிதபபடுத்த வேண்டும். இறுதிததீர்வு காணும வரை 1924ம ஆணடைய ஒப்பந்தப்படி தண்ணீர் விநியோகம் நடைபெற வேண்டும். இத்துடன் காவேரி பாசனப பகுதிகளில் அரசே விரைந்து குழாய்க கிணறுகளை அமைத்து, நிலத்தடி நீரை பாசனத்திற்குப் பயன்படுத்த உதவி செயயவேண்டும், கால் வாய்ப்பாசன தண்ணீரை வீணாகாமல் பயன்படுதத கால்வாயகளில் சிமெண்ட் கான்கிரீட் தளம் அமைக்கவேண்டும்.

## உணவு கொள்முதல்

உணவுக் கொள்முதலில் தமிழக அரசு சமீபத்தில் செய்துள்ள திடீர் மாற்றம கவலையளிபபதாக உள்ளது. அரசு ஏற்கனவே செய்துவந்தகொளமுதல் கைவிடபபடுகிறது, தனிப்பட்ட்வியாபாரிகள்கொள் முதல் செய்ய அனுமதிக்கப் பட்டுள்ளார்கள்.

மேற்கண்ட கொள்கையை அரசு கைவிடவேண்டும்என்று வற்புறுத்துகிறோம்: அரசே கொள்முதல செய்யவேண்டும். சிறு நிலககாரர்கள், குத்தகைவார விவசாயிகள் விற்கும் நெல்லுககு நிர்ணய விலையை விடககூடுதல் போனஸ வழங்க வேண்டும. நகரத்திலும், கிராமததிலும மலிவு விலைககடைகள் மூலம் ஒரு நபருககு ஒரு நாளைககு 500 கிராம அரிசி வீதம் கிடைக்கும் வகையில் கிலோ 1 க்கு ரூ. 1-60 வீதம் விலைக்கு விற்கவேண்டும்.

## விவசாயத் தொழிலாளர் குறைந்த பட்ச கூலி

விவசாயத் தொழிலாளர்களுக்கு குறைந்த பட்சக்கூலி நிர்ணயச் சட்டம வந்தும்,அதற்கென தனி அதிகாரிகள் நியமித்தபின்னும் கூட சட்டம் வருவதற்கு முன் வாங்கிவந்த குறைந்தபட்சக் கூலியையே இப்போதும் பெற்று வருகிறார்கள். மேலும வறட்சியைக் காட்டியும், வறட்சியை உபயோகப்படுத்திக் கொண்டும், விவசாயத் தொழிலாளர்கள் கூலி குறைக்கப்பட்டிருக்கிறது.

ஆகவே,விவசாயத்தொழிலாளர்களது குறைந்தபட்சக்கூலி நிர்ணயச் சட்டத்தை மாநிலம் முழுவதும் உறுதியாக அமுல் நடத்த திட்டவட்டமான நடவடிக்கை எடுக்க வேண்டும். இந்தச் சட்டத்தில் விவசாயத் தொழிலாளர்களின் வேலை நேரம நாள் ஒன்றுக்கு 7 மணி நேரம் என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இது மிகவும கடுமையானது. எனவே, தொடர்ந்து தமிழகம் முழுவதும நடைமுறையில் உள்ள நாள் ஒன்றுக்கு 5 மணி நேர வேலையை வேலை நேரமாக நிர்ணயம் செய்ய வேண்டும்.

## கிரிமினல் குற்றம்

அரசு நிர்ணயித்தகுறைந்தபட்சக கூலிககும அதிகமாகக் கொடுதது வருவதை குறைப்பது தணடனைககுரியகிரிமினல குறறமாக அரசு அறிவித்திருபபதை விவசாயத் தொழிலாளர்கள கவனததிறகுக் கொண்டுவருகிறோம்.

## பினாமி குத்தகைதாரர் பற்றி எச்சரிக்கை

நிலஉச்சவரம்பில் கிடைக்கும் உபரி நிலத்தை விவசாயத் தொழிலாளர்களுக்கு வழங்க வேண்டும். நிலஉச்சவரபபுச் சட்டப்படி உபரியாகக் கிடைக்கும் நிலம விவசாயத தொழிலாளர்களுக்குக் கிடைக்காமல் செய்வதறகு நிலச்சுவான்தார்கள் பினாமி குத்தகைதாரர்களை தமிழகம முழுவதும் தயார் செய்து உபரி நிலங்களைப் பெற்று வருகிறார்கள். இத்தகைய செயல்களை அரசுதடுதது நிறுத்திட வேண்டும்.

## தீண்டாமைச் சட்டத்தை தீவிரமாக்குக

அரசுப் புறம்போக்கு நிலம் காட்டு இலாகா நிலம் ஆகியவைகளை விவசாயத் தொழிலாளர்களுக்கு வழங்க வேண்டும், தீண்டாமைத் தடைச் சட்டத்தை மேலும் தீவிரமாக அமுல் நடதத வேண்டும்.

## கடன் நிவாரண -கடன் ஒத்திவைப்புச் சட்டங்கள்

கடன் நிவாரணத்திற்கும், கடன் ஒத்திவைப்பிற்கும் அரசு கொண்டு வந்துள்ள சட்டங்கள் விவசாயிகளுக்குப் போதுமான உதவி செய்வதாக இருக்க வேணடும். விவசாயிகளுக்கு தேவையான அளவு கடன்கள் கிடைக்க மாற்று ஏற்பாடும் செய்யப்பட வேணடும். இல்லையெனில்,சாதாரண விவசாய மககள், விவசாயம் செய்ய முடியாமல பெரும் அவதிக்குள்ளாயிருக்கும் நிலையிலிருந்து மீள முடியாது போகும. ஆடு—மாடுகள்,நகைகள், பண்ட —பாத்திரங்கள், நிலம், வீடு ஆகிய தமது உடைமைகளை ஈனக் கிரையததிற்கு விறக வேண்டிய நிலைககுத் தள்ளப்பட்டுள்ள நிலையிலிருந்து மீட்சி காண முடியாது.

## உடன் எடுக்கவேண்டிய நடவடிக்கைகள்

ஆகவே அரசு பின் வரும்நடவடிக்கைகளை உடனே எடுக்க வேண்டும என வலியுறுததுகிறோம்.

சுப்ரீம் கோர்ட்டில் தமிழக கடன் நிவாரணச் சட்டத்தின்மீது வாங்கியுள்ள தடையை ரத்துச்செய்ய மாநில அரசு உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும்; ஆண்டு வருமானம் ரூ 2400வரை என்பதற்கு பதிலாக ரூ 5000வரை ஆண்டு வருமானம உள்ள விவசாயிகள்,விவசாயத் தொழிலாளர்கள், கைவினைஞர்கள் ஆகியவர்களின் அனைததுக் கடன்களையும் ரத்துத் செய்ய

(7-ம் பக்கம் பார்க்க)

### உறுப்பினர் சேர்ப்பு-பிரசுர விற்பனை

# த. நா. விவசாயிகள் சங்கம் வேண்டுகோள்

கடந்த 2, 3 தேதிகளில் மதுரையில கூடிய தமிழ்நாடு விவசாயிகள் சங்க நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் துணைத தலைவர் தோழர் என் சங்கரய்யா தலைமையில நடந்தது.

இக்கூட்டத்தில் சங்கத்தின் கடந்த 6மாதகால வேலைகள் பற்றி பரிசீலிக்கப்பட்டு விவசாயிகள் விவசாயத்தொழிலாளர்களது கோரிககைகள் மற்றும் பிரச்சினைகளைத தொகுத்து அறிக்கை ஒன்று தயாரிககப்பட்டது.

இந்த அறிக்கையினை துண்டுப் பிரசுரமாக ஒரு இலட்சம் பிரதிகள் தயாரிதது தமிழகம் முழுவதும் விறக முடிவு செய்யப்பட்டது. 1976—77ம் ஆண்டிற்கு சங்க உறுப்பினர் சேர்பபு இயக்கம் குறித்தும் இக்கூடடத்தில் பரிசீலிககப்பட்டது. 1977 ஜனவரி மாதத்துக்குள் எல்லா மாவட்டங்களிலும் உறுப்பினர் சேர்ப்பு இயககததை முடித்து விடுவது என்றும தீர்மானிககப்படடது. தஞ்சை மாவட்டத்தில் இது வரை 34ஆயிரம் உறுப்பினர்கள் சேர்ககப்பட்டுள்ளார்கள் என்றும் இக்கூட்டததில் தெரிவிக்கப்படடது.

பிரசுரம் வெளியிடும் பொறுப்பை மதுரை—முகவை மாவட்ட விவசாயிகள் சங்கம் ஏற்றுக் கொணடுள்ளது.

# விவசாய மக்களின் கோரிக்கைகள்...

(6ம் பக்க தொடர்ச்சி)

வேண்டும். விவசாயத் தொழிலாளர்களின் வருமானத்தைக் கணக்கிடும்போது ஒரு நாள் கூலி என்பதை அடிப்படையாக வைத்து மாத வருமானத்தை நிச்சயிக்கக் கூடாது. ஆண்டு வருமானம் அனைத்தையும் வைத்துத்தான் மாத வருமானம் கணக்கிடப்பட வேண்டும். கணபதியா பிள்ளை கமிஷன் தஞ்சைமாவட்டத்திலேயே ஒரு ஆண்டுக்கு 5 மாதங்கள்தான் விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கிறது என்று குறிப்பிட்டுள்ளது. இன்று இந்த அளவுக்குக்கூட வேலை கிடைப்பதில்லை.

### கடனுதவி செய்க

கடன் கொடுக்கும் அரசு நிறுவனங்கள், தேசவுடைமையாக்கப்பட்ட வங்கிகள், கூட்டுறவு நிறுவனங்கள் ஆகியவை மூலம் பண்ட பாத்திரங்கள், நகைகள் மீது கடன்கள் கொடுக்க உத்தரவாதமான ஏற்பாடுகள் செய்ய வேண்டும். பயிர்க்கடன், கால்நடைகள் வாங்கும் கடன், சிறு தொழில் உதவிக்கான கடன்கள் ஆகியவைதுரிதமாகத் தேவையான அளவு கொடுக்கப்படவேண்டும்.

### அபராத வட்டியை கைவிடுக

15—1—77-ந் தேதியுடன் முடிவடையும் கடன் ஒத்திவைப்புச் சட்டத்தை மேலும் ஓராண்டு காலத்துக்கு நீடிக்க வேண்டும். கூட்டுறவுத் துறையில் உள்ள குறுகிய கால கடன்களை நீண்ட கால கடன்களாக மாற்ற வேண்டும். இக்கடன்களைக் கட்டுவதற்கு தவணை கடந்த காரணத்திற்காக முதலுக்கும், வட்டிக்கும் சேர்த்து அபராத வட்டி விதிக்கப்படுகிறது. இந்த அபராத வட்டி விதிப்பைகைவிடவேண்டும்.

### நபர் ஜாமீன்மீது கடன் தருக

விவசாயத் தொழிலாளர்களுக்கு ஆண்டு முழுவதும் வேலை கிடைப்பதில்லை, இவர்கள் கூட்டுறவு நாணயச் சங்கங்கள், தேசவுடைமையாக்கப்பட்ட வங்கிகளில் கடன் உதவி கேட்டுப் பெறுவது என்றால் ரூ. 5 ஆயிரம் பெறுமான அளவு சொத்து ஜாமீன் கேட்கப்படுகிறது. இந்த அளவு சொத்து ஜாமீன் கொடுக்க விவசாயத் தொழிலாளர்களிடம் வசதியில்லாததால் இக்கடன் உதவிகளைப் பெறமுடியாது போகிறது. ஆகவே இவர்களுக்கு மாற்றுத்தொழில்கள் செய்வதற்கு நபர் ஜாமீன் மீது தேவையான அளவு கடன் உதவி செய்யவேண்டும்,

### குத்தகை விவசாயிகள்

காவேரியில் தண்ணீர் இல்லாததும், வறட்சியும், வெள்ளமும் புயலும் சேர்ந்து குத்தகை விவசாயிகளைப் பெருமளவில் பாதிக்கச் செய்துள்ளது. ஆகவே குத்தகை விவசாயிகளுக்கு நிவாரணம் அளிக்க கீழ்க்காணும் நடவடிக்கைகள் எடுப்பது அவசியம்,

### குத்தகை பாக்கியை ரத்து செய்க

15—1—77-ந் தேதி வரை ஒத்தி வைக்கப்பட்டுள்ள குத்தகை பாக்கி வசூல் ஒத்திவைப்புச் சட்டத்தை மேலும் நீடிக்கவேண்டும். 1386ம் பசலி வரை (இந்த ஆண்டு வரை) உள்ள குத்தகை பாக்கிகள் முழுவதையும் ரத்துச் செய்ய வேண்டும். பதிவு செய்யப்படாமல் விட்டப்பட்டிருக்கும் குத்தகைதாரர் அனைவரையும் பதிவு செய்யவேண்டும் பதிவு செய்யாத காரணத்திற்காக நிலத்தை விட்டு வெளியேற்றுவதைத் தடுத்து நிறுத்தவேண்டும். குத்தகைதாரர்களது வாரிசுகளுக்கு சாகுபடி உரிமை இல்லை என சென்னை உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்துள்ளது. குத்தகைதாரர் வாரிசு உரிமை பாதுகாப்புச் சட்டத்தை இயற்ற அரசு முன்வரவேண்டும்.

1956ம் ஆண்டிற்குப் பின் குத்தகை—வாரா விவசாயிகளுக்கு எந்தவித வார உயர்வும் கிடைக்கவில்லை. இவர்களுக்கு விகிதாச்சலில் 75சதவிகித வாரம் கிடைக்கச் செய்ய வேண்டும்.

### குடிமனைக்கு 10 சென்ட் இடம்

கோவில், மடம், அறக்கட்டளை ஆகிய நிலங்களை சாகுபடி செய்துவரும் நிலம், குத்தகை—வார விவசாயிகளுக்கே உரிமையாக்கப்பட வேண்டும். மேலே கண்ட நிலங்களில் 5 ஏக்கருக்கு மேல் சாகுபடி செய்பவர்களுக்கும், இடைத் தரகர்களுக்கும் 5 ஏக்கர்வரை சாகுபடிக்கு அனுமதித்து விட்டு மீதி உள்ள நிலத்தை அதில் பாடுபடும் குத்தகை விவசாயிகளுக்கே ஒப்படைசெய்து கொடுக்க வேண்டும்.

கிராமங்களில் குடிமனை இல்லாதவர்கள் அனைவர்க்கும் குடும்பம் ஒன்றுக்கு 10 சென்ட் வீதம் நிலம் இலவசமாக வழங்க வேண்டும்,

### விஷேச வரிகள்

திராட்சை, வெற்றிலை, தென்னை, வாழை, கரும்பு, மஞ்சள் ஆகியவைகளுக்கு ஏக்கர் என்றுக்கு விஷேச வரியாக ரூ 20 வீதமும்—புகையிலை, மிளகாய், நீர்ப்பாசன வசதியுள்ள பருத்தி, பாசன வசதியுள்ள கடலை ஆகியவற்றுக்கு விஷேச வரியாக ஏக்கர் ஒன்றுக்கு ரூ 10 வீதமும் இவ்வாண்டு விதிக்கப்பட்டிருக்கிறது. தண்ணீர்த்தீர்வை முதல் தர பாசன வசதி உள்ள நிலங்களுக்கு ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 12 வீதமும், இரண்டாம்தர பாசன வசதி உள்ள நிலங்ளுக்கு ஏக்கர் ஒன்றுக்கு புதிதாக தண்ணீர் தீர்வை ரூ 10 வீதமும் விதிக்கப்பட்டுள்ளது.

(5ம் பத்தி பார்க்க)

(3ம்பத்தித் தொடர்ச்சி)

யூனிட் ஒன்றுக்கு 12 காசாக இருந்த மின்சாரக் கட்டணம் விவசாயத்திற்கு 15காசாக உயர்த்தப்பட்டிருக்கிறது. ஊராட்சி ஒன்றியங்களில் செஸ் வரி ரூ 1-க்கு ரூ 1 முதல் ரூ 2 வரை கூடுதலாக உயர்த்தப்பட்டுள்ளது. பஞ்சாயத்து வரிகள் உரிய காலத்தில் கட்டப்படாவிட்டால் வரியில் இரண்டரை சதவீதம் அபராதமாக வசூலிக்கப்படுகிறது. மின்சாரக் கட்டணத் தொகையை ஒவ்வொருமாதமும் 14-ந்தேதிக்குள் கட்டாவிட்டால் ஒவ்வொரு பில்லுக்கும் ஏற்கனவே 50 காசு அபராதம் விதிக்கப்பட்டது. இது, கடந்த மாதத்திலிருந்து ரூ 1 ஆக உயர்த்தப்பட்டுள்ளது. இதுபோல பல வரிகளும் கட்டணங்களும் உயர்ந்துள்ளன. இவை விவசாய மக்களை கஷ்டத்துக்கு ஆளாக்கும். ஆகையால் இந்த உயர்வுகள் அனைத்தையும் சிறு நிலக்காரர்களுக்கு ரத்துச் செய்ய வேண்டும்.

### விளை பொருள்களுக்கு நியாய விலை

விவசாயிகள் விளைவிக்கும் பொருட்களுக்கு கீழ்க்காணும் முறையில் நியாயமான விலைகள்நிர்ணயம் செய்யப்படவேண்டும்.

நிலக்கடலைக்கு குவிண்டால் 1க்கு ரூ 200 வீதமும், கரும்புக்கு டன் ஒன்றுக்கு ரூ 150 வீதமும், பருத்திக்கு எம்சியூ போன்ற நடுத்தர ரகங்களுக்கு குவிண்டால் 1க்கு ரூ 500வீதமும், மற்றும் இது போன்ற ஏனைய விளை பொருட்களுக்கு கட்டுபடியான நியாய விலை நிர்ணயம் செய்யவேண்டும்.

### அணிகளுக்கு வேண்டுகோள்

விவசாயிகள் விவசாயத் தொழிலாளர்கள் ஆகியோர்களுக்கு நிவாரணம் அளிக்கக்கூடிய இக்கோரிக்கைகளை நிறைவேற்றும்படி அரசைக் கோரும் விவசாய சங்கத்தின் இந்த முயற்சிக்கு, தமிழ்நாட்டிலுள்ள விவசாயிகள் விவசாயத் தொழிலாளர்கள், மற்றுமுள்ள பொதுமக்கள் அனைவரும் ஆதரவளிக்குமாறு வேண்டுகிறோம்,

# 25 குடும்பங்கள் வலது கம்யூ. விலிருந்து விலகி மார்க்சிஸ்ட் அணிக்கு வந்தன

புதுக்கோட்டை மாவட்டம் ஏனாதி கிராமத்தில்25குடும்பங்களைச் சார்ந்த விவசாயிகளும் குடும்பத்தினரும் வலது கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து விலகி மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட் கட்சிதலைமையிலான விவசாயிகள் சங்கத்தில் சேர்ந்தனர். வலது கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கை பிடிக்காததாலும், விதல வலது கம்யூனிஸ்டு விவசாயிகளுக்கு விரோதமான நடவடிக்கைகளாலுமே, இவர்கள் அக்கட்சியிலிருந்து விலகினர்.

வலது கம்யூனிஸ்ட் கட்சியை சேர்ந்த ஏழை விவசாயிகளான சி. பெரியய்யா, முத்தையா, வைத்தி ஆகியோரை அவர்கள் சாகுபடி செய்து வந்த நிலங்களை ஒத்தியாகவும் கிரையமாகவும் அதே வலது கம்யூனிஸ்ட் கட்சியைச்சார்ந்த பெரியய்யா, சின்னக்கண்ணு, பழனி ஆகிய மூவரும் பெற்றுக்கொண்டு, ஏழை விவசாயிகளை நிலத்தைவிட்டு வெளியேற்ற எத்தனித்தனராம். இந்த அக்கிரமத்தை எதிர்த்து அதே கட்சியைச் சார்ந்த குப்புசாமி கருப்பனும் வாதிடவே, இவ்விருவரையும் அக்கட்சியிலிருந்தும் சங்கத்திலிருந்தும்வெளியேற்ற முயற்சிகளை மேற்கொள்ளப்பட்டன. ஏற்கனவே, வலது கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் நிலையில் அதிருப்தி கொண்டிருந்த குப்புசாமி, கருப்பன் ஆகியோரும் மற்றும் 25 குடும்பங்களும், விவசாயிகளுக்கு விரோதமான இந்த நடவடிக்கை கண்டு வெறுப்பும் ஆத்திரமும் கொண்டனர். எனவே இவர்கள் அனைவரும் அக்கட்சியிலிருந்தும் அதன் சார்பான சங்கத்திலிருந்தும் விலகி மார்க்சிஸ்ட்கட்சி தலைமையிலான வி.ச.வில் செயல்பட தொடங்கினர்.

இதனால் எரிச்சலுற்ற சின்னக்கண்ணுவும், பழனியும் ஏழை விவசாயி குப்புசாமியின் பட்டா இடத்தில் இருந்த வாகைமரம், புளியங்கன்று, வேப்பங்கன்று ஆகியவற்றை வெட்டி அழித்து விட்டனராம். இது சம்பந்தமாக பொன்னமராவதி போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது.

ஏழை விவசாயிகளுக்கு ஆதரவாக பொன்னமராவதி வட்டார மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் கே. சின்னையா செயலாற்றி வருகிறார்.

ஏனாதி கிராமத்தில் கடந்த 25-11-76-ந்தேதியன்று, கட்சியின் மாவட்டப்பொறுப்பாளர் தோழர் டி. கே. ரெங்கராஜன் செங்கொடியை முழக்கங்களுக்கிடையே — வாழ்த்தொலிகளுக்கிடையே ஏற்றுவித்தார்.

# தமிழ்நாடு பஞ்சாலை தொழிற்சங்கங்கள் ஒருங்கிணைப்புக் குழுக் கூட்டம்

கோவையில் கடந்த 6ந் தேதி தமிழ்நாடு பஞ்சாலை தொழிற்சங்கங்களின் ஒருங்கிணைப்புக் குழுக் கூட்டம் நடந்தது. இக்கூட்டத்துக்கு பாபநாசம் லேபர் யூனியன் தலைவர் (பி எல் யூ) திரு பி ஏ கன்னையாநாயுடு தலைமைவகித்தார்;

இக்கூட்டத்தில் சிஐடியூ சார்பில் மாநில சிஐடியூ அலுவலகச்செயலாளர் தோழர் கே. வைத்தியநாதனும், கோவை மாவட்ட மில் லேபர் யூனியன் செயலாளர் தோழர்கே வேணுகோபாலும் கலந்து கொண்டனர்.

மற்றும் ஏ ஐ டி யூ சி சார்பில் ஏ எம் கோபு, எஸ் கருப்புசாமி, பி கே ராமசாமி, எம் என் காளியண்ணன் ஆகியோரும்

டி என் டி யூ சி (ஸ்தாபன காங்கிரஸ்) சார்பில் ஏ. முருகேசன், சண்முகம் ஆகியோரும்,

தி மு க யூனியன் சார்பில் ஏ. வெங்கடாசலம், எஸ். பார்த்தசாரதி ஆகியோரும்,

அ தி மு க யூனியன் சார்பில் எஸ். அரங்கசாமி, ஆர். பழனிசாமி ஆகியோரும்,

சென்னை லேபர் யூனியன் சார்பில் கே. வி. என். ராஜன், என். சுந்தரமூர்த்தி ஆகியோரும்,

பி அண்ட் சி மில் ஊழியர் சங்கம் சார்பில் ஸ்ரீராமுலுவும் மற்றும்பலரும் கலந்துகொண்டு

(4ம் பக்கம் பார்க்க)

# குமரி மாவட்டத்தில் பாப்பா உமாநாத் கட்சி, மாதர்சங்க கூட்டங்களில் பங்கேற்பு

தமிழக ஜனநாயக மாதர் சங்கத்தின் செயலாளர் தோழர் பாப்பா உமாநாத் நவம்பர் 27, 28 தேதிகளில் குமரிமாவட்டத்தில் பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்குகொண்டு சிறப்புரையாற்றினர். இந்நிகழ்ச்சிகளில் ஆயிரக்கணக்கானோர் கலந்துகொண்டு கருத்துரை கேட்டனர்.

### சிறப்புக் கூட்டங்கள்

தக்கலையில் 27-ந் தேதியன்று நடந்த சிறப்புக்கூட்டத்திற்கு தோழர் சி. கனகராஜ தலைமைவகித்தார் தோழர்கள் கே. மாதவன் எம். ஓ சுந்தர், குமாரசாமி ஆகியோர் ஸ்தல நிலைமைகள் பற்றி பேசியபின் தோழர் பாப்பா உமாநாத் இன்றைய அரசியல் நிலை குறித்து உரையாற்றினர்,

ஆரல்வாய்மொழியில் 28ந் தேதியன்று காலை தோழர் கே வேலாயுதம் தலைமையில் நடந்த ஹால்நீ கூட்டத்தில் தோழர் பாப்பாஉமாநாத் சிறப்புரையாற்றினர். பஞ்சாலைத் தொழிலாளர்களது நிலைகுறித்தும் பேசப்பட்ட இக்கூட்டத்தில் மூடப்பட்ட நாகம்மாள் மில் தொழிலாளர்களுக்கு வேலைசெய்த நாட்களுக்கு சம்பளம் கொடுக்கக்கோரியும், ஆலையை அரசே ஏற்று நடத்த வேண்டும் என்று கோரியும்தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### மாதர் சங்கக் கூட்டம்

அன்று பகலில் தடிக்காரன் கோணத்தில்நடந்த மாதர் சங்கப் பேரவைக் கூட்டத்தில் கலந்துகொண்டு பேசிய தோழர் பாப்பா உமாநாத் இன்றையநிலையில் மாதர்களது கடமைகளை விளக்கினர். கூட்டத்துக்கு தோழர்சரஸ்வதிதலைமை வகித்தார். பால்குளம் பகுதியில் ரேஷன் கடை 'ஒன்று திறக்கக் கோரி தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

மாலை 5 மணியளவில் பரசேரியில் நடந்த மாதர் சங்க அமைப்புக் கூட்டத்திலும் தோழர் பாப்பா உமாநாத் பங்கேற்றார். மாதர் சங்க நோக்கம், ஸ்தாபன விதிகள், மாதர்களதுபிரதானகடமைகள் ஆகியவற்றை விளக்கினர்.



எதிர்க்கட்சிகளின் கூட்டம்

# தோழர் பி. ஆர். அறிக்கை

இந்தியக் கமயூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட) யின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி டிசம்பர் 10-ல் புதுடெல்லியிலிருந்து கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டுள்ளார்:-

பிரதமரை சந்தித்து பேசுவதற்கான காரணங்களை தயார் செய்வதற்கு, ஜனசங்கம்,ஸ்தாபன காங்கிரஸ், பாரதீயலோக் தளம்; சோசலிஸ்ட் கட்சி, தி மு க, அகாலிதளம் ஆகிய கட்சிகளின் பிரதிநிதிகள் டிசம்பர் 15-ல் நடத்துகின்ற கூட்டத்தில் நானும் தோழர் இ எம் எஸ் நம்பூதிரிபாட்டும் கலந்து கொள்ளவிருப்பதாக "இந்தியன் எகஸ்பிரஸ்" பத்திரிகையில் செய்தி யொன்றை பார்த்தேன். அச்செய்தியைப் பார்த்து நான் ஆச்சரியமடைந்தேன்.

திருகருணாநிதியால் கூட்டப்பட்ட இக்கூட்டம் பற்றி 3 நாட்களுக்கு முன்பு திரு செழியன் என்னுடன் பேசினர் எனபது உண்மை. ஆனல் அப்பொழுது அவரிடம் மக்களை பாதிக்கக் கூடிய குறிப்பிட்ட பிரச்னைகளில் எந்தவொரு அரசியல் கட்சியுடனும் அல்லது வெகுஜன ஸ்தாபனங்களுடனும். கூட்டாக செயல்பட எங்கள் கட்சி தயாராக உள்ளது; ஆனல் எதிரும்புதிருமான கொள்கைகளைக் கொண்ட ஜனசங்கம்,பாரதீயலோக்தளம் ஆகியகட்சிகளுடன் அரசியல் அடிப்படையில் கூட்டாகச் செயல்பட எங்கள் கட்சி தயாராக இல்லை என தெளிவாகக் கூறினேன். எனவே "எக்ஸ்பிரஸ்"செய் தியில்எவ்விதஉண்மையும் இல்லை.

## மதுரையில் கருத்தரங்கு

19—12—76 ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு
வர்த்தக சங்கப் பேரவையில்
(ராம்நாட் ரோடு)
தோழர் அலாவுதீன்தலைமையில்
தோழர்கள்
பாப்பாஉமாநாத்
ஐ மாயாண்டிபாரதி
நன்மாறன்
பேசுவர்
(கட்டணம் இல்லை)

# 5 அம்சத் திட்டமும் எம்.ஜி.ஆரும் கண்டனங்களும்

உடுப்பியில் படப்பிடிப்புக்குச் சென்றிருந்த அ இ அ தி மு க பொதுச்செயலாளர் திரு எம் ஜி ராமச்சந்திரன், செய்தியாளர்களுக்கு பேட்டியளித்தார். அப்போது '20 அம்சத் திட்டம் 5 அம்சத்திட்டம்என்று பிரிப்பதையே தான் ஏற்கவில்லை. மக்கள் நல்ல திட்டங்களை ஏற்றுக் கொள்ள அதை அமுல்படுத்த பிரதமரின் பெயராலேயே அந்த 5 அம்சத் திட்டமும் வந்திருக்க வேண்டும்—அப்படியிராவிடில், சஞ்சயின் பெயரில் வந்துள்ள அது வேறு உணர்வுகளை ஏற்படுத்தக் கூடும். நாட்டுக்கு ஒரு தலைவர் பிரதம அமைச்சர். அவரது 20 அம்சத் திட்டத்துடன் 5 அம்சத் திட்டத்தையும் சேர்த்து அறிவித்திருந்தால் மக்கள் அதை ஏற்காமலா இருந்திருப்பார்கள்? என்ருர் 'அண்ணு'

# சிறப்புக் கூட்டங்கள்

| | | |
|---|---|---|
| தோழர் கே. முத்தையா | டிசம்பர்—18,19 | நெல்லைமாவட்டம் (சிவகிரி, வீரவநல்லூர்) |
| ,, | ,, 25, 26 | கோவைமாவட்டம் |
| | 31, ஜன-1, 2 | கொச்சி ('தேசாபிமானிவாசகர் வட்ட கூட்டம்) |
| ,, என். சங்கரையா | ,, 25, 26 | மதுரை மாவட்டம் |
| ,, கே பி ஜானகியம்மாள் | ,, 19 | கோவை மாவட்டம் |
| ,, பாப்பா உமாநாத் | ,, 19, 30 31 | மதுரைமாவட்டம் |
| ,, மைதிலி சிவராமன் | ,, 25, 26 | தஞ்சை மாவட்டம் |
| ,, பாலதண்டாயுதபாணி | ,, 19 | நெல்லை மாவட்டம் |

(5ம் பத்தி தொடர்ச்சி)

கிருர். பிரச்னைகளை நுணுக்கமாக தெரிந்துகொள்வதில் புரிந்து கொள்வதில் ஆர்வம் காட்டுகிருர். அவரை எனக்கு மிகவும பிடித்துப் போயிற்று" என்ருர்.

சஞ்சய் காந்தியைப் பற்றி எம் ஜி ஆர் இப்படிக் கூறியதை சஞ்சய் காந்தியே தெரிந்து வைத்திருக்கும்போது சஞ்சலம் கொண்ட சிலர் இங்கு இடையிலே சங்கடப்பட வேண்டுமா?

இங்குள்ள காங்கிரகாரர்களுககு சஞ்சயின் 5 அம்சத் திடடங்கள் என்னென்ன சொல்லு பார்க்கலாம் என்று பரீட்சை வைத்தால் எல்லோரும் ஜீரோ மார்க்தான் வாங்குவார்கள்.

எனவே,காங்கிரஸ் நண்பர்களே,இங்கு நடப்பது காங்கிரஸ் கடசியின் ஆட்சியல்ல. குடியரசுத் தலைவரின் ஆட்சி. எனவே ஆட்சியில் நாம்தான் இருக்கிறோம் என்ற நினைப்பில் எதையும் பேசாதீர்கள். அடுத்த ஆட்சி அ. இ. அ தி மு க வினுடையதுதான். அடுதத முதலமைச்சர் எம் ஜி ராமச்சந்திரன் தான் என்பதை இங்கு திட்டவட்டமாகக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்" இவ்வாறு மனோகரன் குறிப்பிட்டார்.

## பக்தவத்சலம் கண்டனம்

எம். ஜி. ஆர். போன்றவர்கள் சஞ்சய் காந்தியின் 5 அம்ச திட்டங்கள் இந்திரா காந்தி மூலமாக வரவேண்டும் என்று அறிவுரை கூறுவது விசித்திரமானதே. அவரது இந்தப் போக்கில் சர்வாதிகாரத்துவம் தொனிக்கிறது என்று கூறி முன்னுள் முதலமைச்சரும், காங்கிரஸகட்சிதலைவர்களில்ஒருவருமானஎம் பக்தவத்சலம் கடும்கண்டனம் தெரிவித்தார்.

## ப. நெடுமாறன்

இளைஞர்களின் சக்திகளை ஒன்று திரட்டி சமுதாய மாற்றத்திற்குக் கொண்டு வருவது தான் சஞ்சயின் 5அம்ச திட்டம் என்று கூறிய காங்கிரஸ் செயலாளர்களின் ஒருவரான நெடுமாறன், 'இத்திட்டத்துக்கு உள்அர்த்தம் கற்பிப்பது சரியல்ல' என்று குறிப்பிட்டுள்ளார்.

இதே போல் தமிழ்நாடு இளைஞர் காங்கிரஸ் தலைவர் ஜெகவீரபாண்டியன் என்பவரும் எம் ஜி ஆரின் பேட்டிக்கு எதிர்ப்பும், கண்டனமும் தெரிவித்துள்ளார்.

# இந்திமொழிபற்றி அ இ அதிமுக தலைவர்கள்

மதுரையில் கடந்த 7-ந் தேதி தமுக்கம் கலையரங்கில் திரு. முத்து தலைமையில் அ, இ, அ தி மு க பொதுக்கூட்டம் (ஹால) நடந்தது. இதில் அக்கட்சியின் கொளகை பரப்பு செயலாளர் எஸ். டி. சோம சுந்தரம், அமைப்புச் செயலாளர் கே ஏ கிருஷ்ணசாமி.காளி முத்துஆகியோாபேசினர்.

அடுத்துப் பேசிய மற்றொரு தலைமை நிலையச் செயலாளரான ஆர்.எம். வீரப்பன் 'இந்தி மொழி'பற்றி அச்சம் கொள்ள வேணடாம. நமமையறியாமல் எதுவும் நடக்காது. பண்டித நேரு அவர்களது புத்திரி இந்திரா காந்தி இருக்குமவரை இந்தியாவில் ஜனநாயகத்தை குழி தோண்டிப் புதைக்க எவராலும் முடியாது.

இந்தி மொழி, இந்தித் திணிபபு என்று பூச்சாண்டி காட்டுவதை கருணாநிதிக்கு விட்டு விடுவோம். அந்தப் பூச்சாண்டி இங்கு நமககுத் தேவையில்லை"என்று குறிபபிட்டார்.

துணைப் பொதுச் செயலாளரான திரு. கே, மனோகரன் இறுதியில் பேசினர். அவர் பேசுமபோது, "இந்தி பற்றி காளிமுத்து எழுப்பினா. நான் மனம் திறந்து பேசுகிறேன்.

பிரதமரை நன்கு புரிந்தவன், அவர் உலகம சுற்றியவர் ஆங்கிலத்தின் அருமையை அறிந்தவர். அவரது உள்ளததை நன்கு புரிந்தவன் என்ற முறையில் இதை உங்களுக்கு சொலலிக்கொள்கிறேன். மொழியைப் பொறுத்தவரை நாம எந்த மொழிக்கும் எதிரிஇல்லை.

மேலும் தேசிய காங்கிரஸ் வாழ வேண்டும்; வளரவேண்டும் என்று கருதுகிற கட்சி அ இ அ தி மு க. காமராஜர் இறந்ததும் இரண்டு காங்கிரசும் இணைய வேண்டும் என்று முதன முதலில் கூறியவர் எம ஜி ஆர். இத்தகைய விசால இதயம் படைததவர் அண்ணுவுக்கு பிறகு இருப்பவர் யார்? எம் ஜி ஆர்தான் என்றும்குறிப்பிட்டார்.

———

# காங்கிரசாருக்கு சஞ்சய்காந்தியின் எச்சரிக்கை

ஏகாதிபத்திய எதிர்ப்பு பாசிச எதிர்ப்பு என்ற பெயர்களில் சமீபகாலத்தில் தங்களை தததுவார்த்தவாதிகளாக சொல்லிக் கொள்பவர்களின் நடவடிக்கைகள் பற்றி காங்கிரசார் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என சஞ்சய்காந்தி எச்சரிக்கை விடுததுள்ளார்.

ஸஹாரன்பூரில் நடைபெற்ற பொதுக்கூட்டமொன்றில் பேசிய அவர், அத்தகையவர்களுக்கு காங்கிரசிலோ அல்லது இளைஞர் காங்கிரசிலோ எவ்வித இடமும் இல்லை என்று கூறினர்.

இந்தியன் எக்ஸ்பிரஸ்
டிச 6

# பொன்னமராவதியில் நவம்பர் புரட்சிதினம்

புதுக்கோட்டைமாவட்டம் அன்னவாசலில், மகத்தான நவம்பர் புரட்சிதினம் கொண்டாடப்பட்டது. மாவட்ட விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் எம் மாரியப்பன் செங்கொடியை ஏற்றுவித்தார். மற்றும் குடுமியாமலை, சேரனூர். மேமனப்பட்டி, கீமனூர், பொன்னமராவதி வட்டாரங்களிலும் செங்கொடிகள் ஏற்றப்பட்டு சிறப்பாக கொண்டாடப்பட்டது.

# வியட்நாம் தொழிற்சங்க சம்மேளனம் சி.ஐ.டி.யூ.க்கு நன்றி

வியட்நாம் தொழிற்சங்கங்களின் சம்மேளனம், 1976 ஆகஸ்ட் 24ந் தேதியிட்ட நன்றி கடிதமொன்றை சிஐடியூவுக்கு அனுப்பியுள்ளது. நவமபர் 24ந்தேதி கிடைக்கப்பட்ட அக்கடிததத்தின் முழு வாசகம் கீழே தரபபடுகிறது:—

முழுமையான வியட்நாம் இணைப்பு நடந்த சமயத்தில் வியட்நாம் மக்களையும், தொழிலாளர்களையும் 1976 ஜுலை10ல நடைபெற்ற சி ஐ டி யூவின் நிர்வாகக் குழு நிறைவேற்றிய வாழ்த்து தீர்மானததை நாங்கள் பெற்றுக் கொண்டோம். அவ்வாழ்ததுத தீர்மானத்தை பெறுவதில நாங்கள் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறோம்.

வியட்நாம் தொழிலாளி வர்க்கத்தின் சார்பாகவும, மக்களுடைய சார்பாகவும் உங்களுடை சகோதரத்துவ வாழ்த்துககளுக்கு நாங்கள் அனபுடன் நன்றியைத் தெரிவிக்கிறோம். வியட்நாம் இந்தியா ஆகிய இரு நாட்டு மககளுக்குமிடையேயும் தொழிலாளிவர்க்கங்களுக்குமிடையேயும் வியட்நாம் தொழிற்சங்கங்களின் சம்மேளனததிற்கும் சி ஐ டி யூ வுக்குமிடையேயும் நீண்டகாலமாக நிலவி வரும் நட்பு, நெருக்கம் ஆகியவற்றின் துடிப்பு மிக்க உணர்ச்சியாக உங்கள் வாழ்த்தை கருதுகிறோம். யுத்த காயங்களை மிகவிரைவில் ஆற்றும் பொருட்டு உற்பத்தியிலும உழைப்பிலும் வியட்நாம் தொழிலாளர்களும். தொழிற் சங்கங்களும் தங்களுடையமுழு சக்தியை அளிக்கவும் பொருளாதாரத்தை முன்னேற்றவும் வெற்றிகரமாக வியட்நாம் சோசலிஸ்ட் குடியரசை கட்டவும் ஆசியாவிற்கும், உலகம முழுமைக்குமான சமாதானத்திற்காக தங்களுடைய பயனுள்ள பங்கை அளிக்கவும் உங்களுடைய தீர்மானத்தை அவர்களுக்கு விரிவாகத் தெரியப் படுததுவோம்.

வியட்நாம், இந்தியா ஆகிய இருநாட்டு தொழிலாளிகளுக்குமிடையேயும் மக்களுக்கிடையேயும் நம்மிரு தொழிற் சங்க ஸ்தாபனங்களுக்குமிடையேயுமான நட்பும் நெருக்கமும் ஒவ்வொரு நாளும் முன்னேற்றப்படவேண்டும; உறுதியாக்கப்பட வேண்டும்.

—வியட்நாம் தொழிற் சங்கங்களின் சம்மேளனம்.

## மனோகரன் பேச்சு

பக்தவத்சலமும், மற்றும் சிலரும் எம் ஜி ஆருக்கு கண்டனம் தெரிவிததற்கு கண்டனம் தெரிவித்து மதுரையில் 7ந்தேதி நடந்த ஒருகூட்டத்தில் அ இ அ தி மு க துணைப் பொதுச் செயலாளர் கி. மனோகரன் பேசினர்.

"சஞ்சய் காந்தியையா எதிர்க்கிருய்?"என்று சிலர் கேட்கிருர்கள். அவர்களுக்கு ஒன்று கூறிக்கொள்வேன்' நீங்களெல்லாம் சஞ்சய்காந்தியைப் பார்த்திருக்கக்கூட மாட்டீர்கள். நான் அவரை மூன்று முறை சந்தித்திருக்கிறேன். எம். ஜி. ஆர். 2 முறை சந்தித்திருக்கிருர்' அவரைச் சந்தித்த பிறகு எம். ஜி. ஆர். என்ன சொன்னுர் தெரியுமா? "அவர் ரொம்பவும் சுறுசுறுப்பானவராக இருக்

(3-ம் பத்தி பார்க்க)

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் "தீக்கதிர்" அச்சகத்தில் [6]16 பைபாஸ் ரோடு மதுரை 625018] அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் எம் ஆர் வெங்கடராமன்